# ரகுநாதன்

# சேற்றில் மலர்ந்த செந்தாமரை

மீனாட்சி புத்தக நிலையம்

# சேற்றில் மலர்ந்த செந்தாமரை

ரகுநாதன்



மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக் கோபுரத் தெரு : மதுரை-1
கிளை : 228, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை—5

முதற் பதிப்பு : ஏப்ரல், 1955
இரண்டாம் பதிப்பு : மார்ச், 1958
மூன்றும் பதிப்பு : செப்டம்பர், 1963
நான்காம் பதிப்பு : நவம்பர், 1980
மீனாட்சி—170

# SETRIL MALARNDHA SENDAMARAI

Tamil Short Stories

By **RAGUNATHAN**



Fourth Edition, November, 1980
134 Pages
10 pt. letters
18 X 12.5 cms
10.9 kg. D/C
Seshasayee White Printing Paper
Box Board Binding
B. R. V. Press, 143, Big Street,
Madras - 5

விலை ரூ.6-00

MEENAKSHI PUTHAKA NILAYAM
60, West Tower Street, Madurai—625001

Branch : 228, Triplicane High Road, Madras—600 005

# பதிப்புரை

**ரகுநாதன்** என்ற பெயரில் எழுதி வரும் **திரு. சிதம்பர ரகுநாதன்** முந்திய தலைமுறையைச் சேர்ந்த மூத்த எழுத்தாளர். ஆற்றல் மிக்க எழுத்தாளரான இவரது கதைகள், நாவல்கள், இலக்கிய விமர்சனக் கட்டுரைகள், மற்றும் **'திருச்சிற்றம்பலக் கவிராயர்'** என்ற புனைபெயரில் இவர் இயற்றியுள்ள கவிதைகள் முதலியவை அவற்றின் தனித்த முத்திரையினால், இவருக்கு இலக்கிய உலகில் ஒரு சிறப்பான ஸ்தானத்தைத் தேடிக் கொடுத்துள்ளன.

இவரது 'பஞ்சும் பசியும்' என்ற நாவலே தமிழ் மொழியிலிருந்து முதன் முதலில் ஐரோப்பிய மொழியொன்றில் (செக் மொழியில்) மொழி பெயர்த்து வெளியிடப்பட்ட முதல் தமிழ் நாவலாகும். மேலும் இவரது கதைகள் பலவும் செக், ஹங்கேரியன், ஜெர்மன், போலிஷ், ரஷ்யன் போன்ற மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

**புதுமைப்பித்தனின்** நெருங்கிய நண்பரான இவர், அவரது படைப்புக்களைத் தொகுத்துப் பல தொகுதிகளாக வெளிக் கொணர உதவியதோடு, **புதுமைப்பித்தனின்** வாழ்க்கை வரலாற்றையும் மிகவும் போற்றத்தக்க முறையில் நூலாக எழுதி வழங்கியுள்ளார். **புதுமைப்பித்தனின்** இலக்கியப் பரம்பரையில் பூத்த மலராக விளங்கிய இவர், தமிழ்நாட்டில் முற்போக்கு இலக்கியப் படைப்புக்களுக்கும் முன்னோடியாக விளங்கியுள்ளார். இவரது இலக்கியப் பணிகளைப் பாராட்டி, இவருக்கு சோவியத் நாடு வழங்கும் நேரு நினைவுப் பரிசும் இருமுறை வழங்கப்பட்டுள்ளது. இப்பரிசைப் பெற்ற வெற்றியாளர் என்ற முறையில் இவர் சோவியத் நாட்டுக்கும் சென்று வந்துள்ளார்.

**'சேற்றில் மலர்ந்த செந்தாமரை'** என்ற தலைப்பைக் கொண்ட இந்தத் தொகுதியில் இடம் பெற்றுள்ள கதைகள்

யாவும் சிந்தனையைத் தூண்டி மனித வாழ்வை வளப்படுத்தும் வேட்கையைப் பிரதிபலிக்கும் கதைகளாகும். கதை எழுதுவ தென்பது ஆசிரியருக்குக் கைவந்த சரக்கு. ரகுநாதன் படைத்து விடும் பாத்திரங்கள் நம் உள்ளத்தை விட்டு நீங்குவதில்லை. உதாரணமாக, இந்தக் கதைத் தொகுதியில் வரும் டேவிட்ஸன் தெரு ரிக்ஷாக்காரன் நம்முன் எவ்வளவு மகத்தான பேருருவமாகக் காட்சியளிக்கிறான்! 'பிச்சையா எடுக்கே' என்ற அவனது குரல் நம் காதுகளில் என்றும் ஒலித்துக் கொண்டிருக்கும் அல்லவா? அதேபோல் காதல் பயின்ற மீனாட்சியையும், அவளது பரணி நட்சத்திரக் குழந்தையையும் மறந்து விடுவது என்பதும் நமக்குச் சுலப மான காரியம் அல்ல.

மனிதாபிமான நோக்கமும் வளமிக்க சொல்லாற்றலும் கருத்தாழமும் மிக்க இந்தக் கதைத் தொகுதியை எங்கள் வெளியீடாக மீண்டும் வெளியிடுவதில் நாங்கள் மகிழ்ச்சி யடைகிறோம்!

மதுரை
1 நவம், 80.

செ. செல்லப்பன்

# நன்றியுரை

இந்தக் கதைத் தொகுதியில் பத்துக் கதைகள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு கதையின் முடிவிலும் அது எழுதப் பட்ட வருடம் குறிக்கப்பட்டுள்ளது. இது அந்தந்தக் கதை பிறந்த காலத்தையும், கதையை எழுதத் தூண்டிய சமுதாய அரசியல் சூழ்நிலைகளையும் உணர்ந்தறிந்து கொள்ள உதவி யாக இருக்கும்.

இந்தக் கதைகளிற் சில சக்தி, ஜனசக்தி, காண்டிபம், கலைக்கதிர், தினமணி முதலிய பத்திரிகைகளில் வெளிவந் தவை. சில இந்தத் தொகுதியிலேயே முதன்முதலாக அச்சேறி யவை. இவற்றில் 'இழி தொழில்' என்ற கதை, 'காந்தி வழிக் கதைகள்' என்னும் தலைப்பில் காந்தீயக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு, தமிழ் எழுத்தாளர்கள் பலர் எழுதிய கதைத் தொகுதியிலும் வெளிவந்தது. 'சேற்றில் மலர்ந்த செந்தாமரை' என்ற தலைப்புக் கதை அகில இந்தியச் சிறுகதைத் தொகுதி ஒன்றில் இடம் பெற்றது. இவற்றிற் சில சோவியத் நாட்டில் வெளியான 'ஆசிய இலக்கியம்' என்ற தொகுதியிலும் ரஷ்யனில் மொழி பெயர்க்கப்பட்டு வெளி வந்தன. மேலும் பல கதைகள் ஹிந்தி மொழியிலும் மற்றும் செக், ரஷ்யன், ஹங்கேரியன், போலிஷ் முதலிய அயல் மொழி களிலும் மொழி பெயர்க்கப்பட்டு, பத்திரிகைகளிலும் கதைத் தொகுதிகளிலும் வெளியிடப் பெற்றுள்ளன. இந்தக் கதை களை வெளியிட்ட பத்திரிகை ஆசிரியர்களுக்கும் மற்றும் பிற மொழிகளில் மொழி பெயர்த்து வெளியிட்ட ஆசிரியர்களுக் கும் எனது உளமார்ந்த நன்றி.

நவம்பர், 1980 ரகுநாதன்

## ஆசிரியரின் பிற நூல்கள்

**சிறுகதை :**

க்ஷணப்பித்தம்
சுதர்மம்
ரகுநாதன் கதைகள்

**கவிதை :**

ரகுநாதன் கவிதைகள்
கவியரங்கக் கவிதைகள்
காவியப் பரிசு

**நாவல் :**

கன்னிகா
புயல்
பஞ்சும் பசியும்

**நாடகம் :**

சிலை பேசிற்று
மருது பாண்டியன்

**விமர்சனம் :**

இலக்கிய விமர்சனம்
சமுதாய இலக்கியம்
கங்கையும் காவிரியும்
பாரதியும் ஷெல்லியும்
பாரதி : காலமும் கருத்தும்

**வரலாறு :**

புதுமைப்பித்தன் வரலாறு

# உள்ளே

# சேற்றில் மலர்ந்த செந்தாமரை

அன்று ஞாயிற்றுக்கிழமை. மினர்வா டாக்கீஸ் மாட்னிக் காட்சிக்கு வழக்கம்போலவே க்யூவில் நிறையப் பேர் நின்று கொண்டிருந்தனர். மேலும் அன்று சினிமா விசிறிகளின் அபிமான நக்ஷத்திரங்கள் நடித்த ஆங்கிலப் படம். கிரீர் கார்ஸனும் வால்ட்டர் பிட்ஜனும் நடித்துள்ள வர்ணப் படம்: "சேற்றில் மலர்ந்த செந்தாமரை"—"Blossoms in the dust !"......

சென்னைச் சமூகத்தின் ஜனத் தொகையையும், ரசனைச் சுவையையும் 'கிராப் போட்டுக் காட்டிய மாதிரி க்யூ வரிசைகள் நின்றுகொண்டிருந்தன. மாணவர்கள், குமாஸ்தாக்கள், ஏஜெண்டுகள், தொழிலில் புகாத பட்டதாரிகள், 'சினிமா 'எக்ஸ்ட்ரா'க்கள், பத்திரிகாசிரியர்கள்—இத்தியாதி ரகமான மத்தியதர வகுப்புக் கூட்டம் ஒன்பதரையணா வரிசையில் நின்றது. கூட்ஸ் வண்டித் தொடர் போல, க்யூ வரிசை நின்று கொண்டிருந்தது.

நான் ரிக்ஷாவை விட்டு இறங்கினேன்; ரிக்ஷாக்காரனுக்குக் கூலி கொடுப்பதற்காக மூன்றணாக் காசை எடுத்து நீட்டினேன்.

"என்ன சாமி. பேசின காசைக் குடு சாமி" என்று எதிர்த்தான் அவன்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. மண்ணடியிலிருந்து டேவிட்ஸன் தெருவுக்கு வருவதற்கு மூன்றணா நியாயமான வாடகைதான். அவன் நாலணா கேட்டான்.

நான் மூன்றணாத்தான் தருவேன் என்றேன். 'என்னமோ ஏளெ, பாத்துக்குடு சாமி—ம்—ஏறு'' என்றான் அவன். ஏறி வந்து இறங்கிய இடத்தில் தகராறு.

''மூணு அணாத்தானடா பேசினேன்?''

''என்ன சாமி, நாலணாக் குடு; இல்லாட்டி ஒங்காசை ஒங்கிட்டவே வச்சிக்கோ'' என்றான் அவன்.

''பேசின கூலிக்கு மேலே ஒரு பைசாத் தர முடியாது!''

''தராட்டி போ, சாமி'' என்று கூறிவிட்டு, காசை வாங்க மறுத்து ஏர்க்காலை உயர்த்தினான்.

''என்னடா வம்பு பண்றே? மண்ணடியிலேயிருந்து வர்ரதுக்கு மூணு அணாவுக்கு மேலேயா தருவாங்க?'' என்றேன் நான்.

''உனக்கென்ன சாமி தெரியும்? நா முச்சூடும் வெயில்லே இஸ்துக்கினுப்பூணாத் தெரியும்!—வவுத்திலெ அடிச்சா என்ன சாமி அர்த்தம்?'' என்று ஏக வசனத்தில் பொழிந்தான்.

ஒரு அணா கூடக் கொடுப்பதில் எனக்கு ஒன்றும் நஷ்டமாகிவிடாது. இரண்டு வில்ஸ் சிகரெட்டுக்குரிய செலவு தான். ஆனால், அந்தப் பயலின் முரண்டுத்தனத்துக்குப் பணிந்து விட்டுக் கொடுப்பதா என்ற போலிக் கௌரவம் கையை நீட்ட மறுத்தது. ஆனால் க்யூவிலிருந்த தெரிந்த, தெரியாத முகங்களெல்லாம் என் பக்கம் திரும்பின. அவர்கள் முன்னால் அவனிடம் வாதாடுவதும் என்னுடைய மத்திய தர வகுப்பு மனப்பான்மைக்கு ஒத்து வரவில்லை. ஆகவே அவனோடு மேலும் மல்லாடாமல் காசை எடுத்து 'விட்டெறிந்தேன்!'

மனசுக்குள்ளே ''கொஞ்சங்கூட நாணயமில்லாத பயல், சின்னச்சாதிப் பயலுக்கு சின்னப் புத்திதானே இருக்கும்''

என்று முணகிக்கொண்டு, க்யூவில் நின்றேன்.

புக்கிங் ஆபீஸ் இன்னும் திறக்கப்படவில்லை. நிழலோரமாய் க்யூ வரிசை ஒதுங்கி நின்றது. வரிசையிலுள்ளவர்கள் பேப்பர்கள் வாசித்தனர்; பாடப் புத்தகங்கள் படித்தனர்; வம்பளந்தனர்; சிகரெட் புகைத்தனர்; ஒரு கால் மாறி மறு காலில் நின்றனர்.

நானும் நின்று கொண்டிருந்தேன்.

மினர்வா டாக்கீஸுக்கு எதிர் வரிசையில் ஒரு ரிக்ஷாக் காரக் குடும்பம் வாழ்ந்து கொண்டிருந்தது. ஒரு பண்டகக் கிடங்குக்கு வெளிப்புறம் அமைந்த ஒரு முழத் திண்ணையில் அந்தக் குசேலக் குடும்பம் வாழ்ந்து வந்தது. காரை விழுந்த சுவர்ப் பகுதி புகையும் புழுதியும் படிந்து கறுத்துப் போயிருந்தது. மூலையிலே ஒன்றிரண்டு கரிச் சட்டிகள், எனுமல் விழுந்த எனுமல் தட்டு, தகரக் குவளை. கிழிந்த மூங்கில் பாய் முதலியன கிடந்தன. திண்ணை விளிம்பிலே ஒரு கிழிந்த கித்தான் சாக்குத் திரை; சாக்குத் திரையின் வழியாக, உள்ளே கந்தைத் துணியில் கிடந்த கருமெழுகுப் பொம்மை—அந்தக் கைக் குழந்தை—காலைக் காலை உதைத்துக்கொண்டு கிடந்ததைப் பார்க்க முடிந்தது; கழுத்திலே கிடந்த சங்கு வெள்ளைப் பாசிச் சரம் அதன் கருமையைத் துண்டாக்கி அளந்து காட்டிற்று.

திண்ணைக்குக் கீழே தென் பக்கத்தில் மூங்கில் பாயை விரித்து அதன்மேல் இருவர் அமர்ந்திருந்தனர். ஒருத்தி பூளையடைந்த கண்ணும், புழுதியடைந்த தலையுமாய் வாடி வதங்கிப் போன சாதிக்காயைப் போல் உள்ள கிழவி. மற்றொருத்தி ஊத்தம் போட வைத்த பேயன் பழம் போல மெருகும் மினுமினுப்பும் ஏற்று

வரும் பருவகால யுவதி. அந்த யுவதி கறுப்பி; கருப்பில் அழகி. கையிலே பச்சைக் கண்ணாடி வளையல்கள்; நெற்றியில் குங்குமம், கழுத்திலே அழுக்கேறாத மஞ்சட் கயிறு. புது மணப் பெண்ணோ?...—அந்தக் கிழவி அவளுக்குச் சீவி முடித்துச் சிங்காரித்துக் கொண்டிருந்தாள்.

நான் க்யூவைக் கவனித்தேன். புக்கிங் ஆபீஸ் திறந்தாய்விட்டது. எனினும் நான் ஆகக் கடைசியிலல்லவா நிற்கிறேன்! எனக்குப் பின்னால் க்யூ வரிசை வெகு நீளம் நின்று கொண்டிருந்தது. ரயில் வண்டிப் பூச்சி போல க்யூ நகர்ந்தது. நான் ஓரடி முன் சென்றேன்.

"எப்போதுதான் நமக்கு டிக்கட் கிடைக்கப் போகிறதோ?" என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ஏற்கனவே வந்த படந்தான்: நல்ல படம். நானும் அந்தப் படத்தை முன்னொரு தடவை பார்த்திருக்கிறேன்...

படத்தின் பெயரே கவிதை மாதிரி ஒலிக்கிறது!... சேற்றிலே மலர்ந்த செந்தாமரை Blossoms in the dust!.... ஒரு குடும்பம்—கார்ஸனும், பிட்ஜனும்தான்—அவர்களுக்கு ஒரு பிள்ளை; அன்பான பிள்ளை; இருவருக்கும் அவன் மீது உயிர்!....ஆனால், அந்தப் பையன் இறந்து விடுகிறான்!...

"ஏ, சவமே! எங்கே சுத்திக்கினு திரியுதே. துண்ண மாத்திரம் வாரியா? ஏதாச்சும் ஆக்கிவச்சாத்தானே துண்ணலாம்!" என்று ஒரு கரட்டுப் பெண் குரல் எரிந்து விழுந்தது.

திண்ணைப் பக்கம் திரும்பினேன். கரி பிடித்த மூன்று கற்களைக் கூட்டி அடுப்பு வைத்து அடுப்பிலே அரிசியைப் போட்டுவிட்டு, மீண்டும் கத்தினாள் அந்தப்

பெண். தாயின் குரல் கேட்ட 'சவம்' ஓடோடியும் வந்தது.

'போயி, எரிக்க ஏதாச்சும் பொறக்கிக்குனு வா' என்று உத்தரவிட்டு, புகையும் அடுப்பை ஊதினுள். புகை மேலும் மேலும் அதிகமாக முண்டியது. கண்களைக் கசக்கிக்கொண்டே ஊதினுள். அதற்குள் திண்ணையிலே கிடந்த பிள்ளைமேல் சாக்குத் திரை வழியாக சூரிய ரச்மி சுள்ளென்று உறைக்கவே, அந்தப் பிள்ளை வீல் வீலென்று கத்திற்று. உடனே எழுந்து சென்று குழந்தையை எடுத்து மடியில் வைத்துக்கொண்டு தாய்ப்பால் ஊட்டினுள்.

என்னுடைய கண்கள் அந்தச் 'சவத்தைப்' பார்த்தன. பிறந்த மேனியாக, அரைஞான் கயிறுகூட இல்லாமல் திரியும் சிறுவன் அவன். கரிய உடம்பு; 'லிவர்க்யூர்' விளம்பரக் குழந்தையின் வயிற்றைப் போன்ற தொந்தி, சிக்கலும் பிசுக்கும் பிடித்த தலைமயிர், மூக்குத் தொளையிலிருந்து அயிரை மீன் மாதிரி எட்டி எட்டிப் பார்க்கும் சளி. சிறுவன் நாக்கை நீட்டிச் சளியைத் துடைத்து, வாய்க்குள் இழுத்துக் கொண்டான். பிறகு அங்கு கிடந்த சினிமா நோட்டீஸ், டிக்கெட், காகிதம், வைக்கோல், வாழைத்தடை முதலிய கழிவு எரி பொருள்களைத் தேடிப் பொறுக்கி அடுப்பண்டை போட்டான்.

அதற்குள் தலைவாரி முடித்த அந்த யுவதி "ஏ, கெய்வி, பானையை எடுத்துக்கினுபோயி, தண்ணி புடிச்சிவா" என்று கூறினுள். புகைந்து விட்டதால், அடுப்பு லேசில் பற்றிக் கொண்டது. தெருத் திண்ணையில் தாய் குழந்தையை உறங்கப் பண்ணிக் கொண்டிருந்தாள். மூங்கில் பாயிலிருந்த 'கெய்வி' கடைவாய் வழியே வழிந்தோடும் புகையிலைச் சாற்றை, புறங்கையால் துடைத்துவிட்டு பானையை எடுத்துக்

கொண்டு நடந்தாள். 'சவம்' பேப்பர் பொறுக்கிக் கொண் டிருந்தது...

"முன்னே போங்க ஸார்" என்ற குரல் கேட்டு, பிரக்ஞைக்கு வந்தேன்; முன்னேறினேன். இன்னும் க்யூ குறைந்தபாடில்லை! எறும்புச் சாரைபோல க்யூ நின்றது. நான் டிக்கட் வாங்குவதற்கு இன்னும் அறுபது பேராவது முன்னேற வேண்டும். கால்மாறி நின்று கொண்டு எதிரே தோன்றிய சுவரொட்டி விளம்பரத்தைப் பார்த்தேன்...

**கார்ஸனும், பிட்ஜனும்!**—கார்ஸனின் அமைதியும் அழுத் தமும் நிறைந்த முகம். பக்கத்தில் பிட்ஜனின் மூக்கும் முழியும் புடைத்து நிற்கும் பக்கவாட்டுச் சித்திரம். இரண்டு சோக சித்திரங்கள், பிள்ளையைப் பறிகொடுத்துவிட்டு எப்படி நடிப்பது? சோக சிகரத்தில் கார்ஸன் எப்போதும் நன்றுகவே நடிக்கிறுள். 'மாடம் க்யூரி'யில் புருஷன் இறந்த சொல் கேட்டு, ஒரு வார்த்தை கூடப் பேசாமல், ஆடாமல், அசையா மல், அழாமல் உணர்ச்சிக்கு உருக்கொடுத்து இருப்பாளே... இதிலும் குழந்தை இறந்தவுடன் நன்றுய்த்தான் நடிக்கிறுள். ஆசைக்குரிய குழந்தை இறந்தவுடன் பித்துப் பிடித்தது போன்ற பிரமை. எந்தக் குழந்தையைக் கண்டாலும் ஒரு ஆனந்தம்—துக்கம்! ஆகவே தனது வாழ்நாள் முழுவதை யுமே குழந்தைகளுடன், குழந்தைகளுக்காகக் கழித்து விடலாம் என்று எண்ணுகிறுள். அதனுல், நிராதரவான குழந்தை களையும், தாய் பெயரையோ தகப்பன் பெயரையோ அறியாத அனுதைக் குழந்தைகளையும் பராமரிக்க எண்ணு கிறுள். ஆனுல், அத்தனையையும் பராமரித்து வளர்த்து, ஆளாக்குவதற்குப் பணம்?......

"சார்! ஒரு பைசா குடு சார்!"

அந்தப் பிச்சைக் குரல் கேட்டு திரும்பினேன். அந்தச் 'சவம்' க்யூவரிசையிலுள்ள ஒவ்வொருவரிடமும் பிச்சை கேட்டான்; வாய் நோக்கி வழியும் சளியையும் நக்கிக் கொண்டான்.

எதிர்த்த சரகில் 'ஓம் மச்சாவி வந்துட்டுது' என்ற குரல் கேட்டது. திரும்பினேன். அடுப்பிலிருந்து சோற்றை இறக்கி வைத்த யுவதி தலையைத் திருப்பினாள். ரிக்ஷாவை ஓரமாய் நிறுத்தி விட்டு, மனைவியை நோக்கி நெருங்கி வந்தான் 'மச்சாவி.' அவள் முன் குந்தி இருந்து, ''அண்ணாத்தை இன்னம் வரலியா?'' என்று கேட்டுக் கொண்டே ''சரி—சாதத்தைப் போடு, நான் போவணும்'' என்றான்.

''இப்பத்தானே வந்தே. அதுக்குள்ளாச்சும் பூணும்ங் கிறீயே!'' என்று மெதுவாகச் சொன்னாள் யுவதி.

அதற்குள் திண்ணையிலிருந்தவள் குழந்தையை நிழ லோரமாய்ப் படுக்கப் போட்டுவிட்டு இறங்கிவந்தாள்.

''ஏங்கக்கா. இது போவுதாம். நானு சாதத்தைப் போடட்டுமா?'' என்றாள் யுவதி.

''போடு, போடு, நாலு காசு கிடக்கிறதைக் கெடுத்துப் புடாதே'' என்றாள் பரட்டைத்தலை அக்கா.

அந்த இளம் தம்பதிகள் திண்ணையில் ஒதுங்கினர்; சாக்குத் திரைக்குப் பின்னால் அவன் உட்கார்ந்தான். அவள் சாதத்தை ஏனமல் தட்டில் போட்டாள். அவன் தன் மடியிலிருந்த மஞ்சட் சிவந்திப் பூவை மெள்ள அவள் தலையில் ரகசியமாகச் சூட்டினான்.

யுவதி தலையைத் தொட்டுப் பார்த்துவிட்டு, ''வெள் ளாடாதே. அக்கா பாத்திரும்!'' என்றாள்.

''அடி என் குஞ்சே!—அசல் சிந்தாமணி மாதிரி இருக்கியே!''

"என்னை என்ன குச்சுக்காரின்னு நெனச்சே!"

இருவரும் ஏனோ சிரித்துக் கொண்டனர். என்றோ துணிந்து அவர்களிருவரும் தமது 'ஹனிமூன்' காலத்தில் சினிமா பார்த்தார்களோ என்னவோ?

"இன்னிக்கும் பூவமா?" என்று கேட்டுக்கொண்டே அவளுடைய கன்னத்தில் கிள்ளினான் உடையவன்...

அந்தக் காதல் நாடகத்தை அதிக நேரம் கவனிக்க வில்லை, மீண்டும் சூழ் நிலை என்னை இடித்தது; க்யூவில் முன்னேறினேன். இரை தின்ற பாம்பு போல மெதுவாக க்யூ வரிசை முன்னேறியது.

"இன்னம் எத்தனை நாழியாகுமோ? என்றது ஒரு குரல். "வந்த படத்துக்கே இத்தனை டிமாண்டா?" என்றது வேறொன்று.

வந்த படம்தான். எனினும் ஏன் இந்தக் கூட்டம்? நல்ல படம். உணர்ச்சியைத் தொடும் படம். அனாதை விடுதிக்காக அவள் பணம் சேர்க்கிறாளே!...எத்தனை எத்தனை பெரிய மனிதர்களை யெல்லாம் நாடுகிறாள்! ரகசியக் காதல் கேளிக்கைகளிலும், காம விகார விபசா ரங்களிலும் பொழுதைப் போக்கி, விபரீதங்களை உண் டாக்கும் பணக்கார ஆண்-பெண்கள்!...ஒருவரேனும் மனமிரங்கவில்லை. அந்தக் கிழவி! எண்பது வயதாகி யும் பவுடரையும், பகட்டையும், சாகசத்தையும் விடாத அந்தப் பண மமதை படைத்த கிழவி, அவள் என்ன சொல்கிறாள்; 'விபசாரத்திலே பிறந்த குழந்தை களுக்கு வீடு வாசலா?' அதற்குக் கதா நாயகி அளிக் கும் அந்தப் பதில்! 'யார் விபசாரிகள்! காம லீலையின் பயனை அறியாது, கற்பை, கன்னிமையை இழந்து பிள்ளைகளைப் பெற்றுத் தூர எறிந்து, தங்கள் பண வலி

யால், அதிகாரத்தால் குற்றத்தை மறைத்து விடுகிறுர்களே—அவர்களா...அல்லது, இந்த அப்பாவி அனுதைக் குழந்தைகளா?...யார் விபசாரிகள்!...எந்தக் குழந்தையும் கள்ளக் குழந்தைகளல்ல...அதைப் பெற்றவர்கள் தான் கள்ளத்தனமான பெற்றேர்கள்!...பாபத்தின் சிசு பாபியா?—பாபச் செயலிலே பிறந்த பிள்ளை தேவனுகவும் முடியும்!"—

என் மனம் தத்துவ விசாரத்தில் இறங்குவதை, சவம் தடை செய்தது. "சார் ஒரு பைசா!" நான் ஒன்றும் சொல்லாமல் காலணு எடுத்துக் கொடுத்தேன்.

"ரொம்பவும் பொருத்தமான தலைப்பு...Blossoms in the dust !.......இன்று உலகப் புகழ் பெற்ற ஸ்டாலின் சக்கிலியின் பிள்ளை.......கதாசிரியன் கார்க்கி மூட்டை சுமந்தவன்! ரூசோ ரொட்டிக் கிடங்கிலே இருந்தவன்! சேற்றிலே செந்தாமரை......குப்பையில் குருக்கத்தி.......Blossoms in the dust!'

எதிர்த் திண்ணைக்கு இன்னொரு ரிக்ஷா வந்து நின்றது. ஏர்க்காலைத் தணித்து இறக்கிவிட்டு, உடம்பிலே எண்ணெய் மாதிரி வழியும் வியர்வையைத் துடைத்துக் கொண்டு வந்தான் ரிக்ஷாக்காரன்.

"என்ன, சோறு ஆக்கினியா?" என்று அலுப்புடன் கேட்டுக்கொண்டே திண்ணைச் சுவரில் சாய்ந்தான்.

"மச்சாவி கூட வந்து துன்னுட்டுப் போயிரிச்சு. நீ துண்ணிரியா?" என்று கேட்டாள் சம்சாரம்.

"சரி. சின்னப் பெயலே எங்கே?"

"சவம், இங்னே தானே நின்னுது!"

தகப்பனுடைய கண்கள் க்யூ வரிசையில் 'சார், காலணு சார்' என்று தன் மகன் கையேந்திப் பிச்சை எடுப்பதைக் கண்டு விட்டன. உடனே படியிலிருந்து ஒரு தாவுத் தாவி

க்யூவுக்கு வந்தான். 'சவத்தின்' விரிந்த கரத்தைப் பார்த் தான். அதில் நான்கு காலணுக்கள் இருந்தன.

தகப்பனின் முகம் ரத்தம் பாய்ந்ததால் பளபளத்தது.

"சவத்துக்குப் புறந்த நாயே! என் கண்ணுக்கு முன்னு லேயே பிச்சையா எடுக்கே? உனக்கு என்ன கொள்ளை நோவு வந்தது?" என்று சீறிக் கொண்டே கையிலிருந்த காசைப் பிடுங்கித் தூர எறிந்துவிட்டு, சிறுவனை மொத்து மொத் தென்று அடித்தான்.

சிறுவன் வீறிட்டழுதான்.

"அத்தெ ஏங், மொத்துதே?" என்று நிர்விசாரமாய்க் கேட்டாள் தாய்.

"ஏனு? நானு சம்பாரிச்சுக் கொட்றது காணுதுன்னு, ஓம்புள்ளே பிச்சை எடுக்கான்?—மானம் மரியாதை இல் லாமே" என்று இரைந்தான்.

க்யூ முன்னேறியது; நானும் முன்னேறினேன். பிராட்வே யில் கட, கடா என்று டிராம் வண்டி ஓடிற்று. க்யூவும் வண்ணாரப்பேட்டை ட்ராம் வண்டிமாதிரி ஒருஅடி முன்னேறு வதும் ஒரு அடி நிற்பதுமாய் இருந்தது. கால் மாற்றி நின்று கொண்டு பையிலிருந்த டிக்கட் பணத்தை எடுத்தேன்; இன்னும் மூன்று பேர் கடந்து விட்டால்' எனக்கும் டிக்கட் கிடைத்துவிடும்.......

அந்தத் திண்ணையைப் பார்த்தேன். மனைவி உருட்டிப் போடும் கவளங்களை விழுங்கிக்கொண்டிருந்தான் புருஷன். 'சவம்' மூலையிலே இருந்து சிணுங்கிக் கொண்டிருந்தது. "பயலுக்கு ஒத்தெப் பருக்கை குடுக்காதே—நாய்க்குப் பட்டாத்தான் தெரியும்!" என்று மனைவியிடம் கோபத்துடன் சொல்லிக் கொண்டான் ரிக்ஷாவாலா. இடையிடையே

"பிச்சையா எடுக்கே?" என்று முனகிக் கொண்டான்.

க்யூ முன்னேறியது—...

ச்சை—உடல் முறியச் சம்பாதித்த காசை கள்ளுக் கடைக்கும், தவணைக்காரனுக்கும் கொடுத்து விட்டு வாழும் ரிக்ஷாக்காரன் தருமத்தை ஏற்கமாட்டானா? 'தருமம்' என்பதே வெறும் அலங்கார வார்த்தைதானா?...அப்பொழுது என்னை ஏற்றி வந்த ரிக்ஷாக்காரன் ஓரணாவுக்காக மல்லாடினான். இவன் ஓரணாவைத் தூர எறிகிறான்!—இது பிச்சைக் காசு—எச்சில் காசு! உழைப்புக்குத் தகுந்த கூலியை மல்லாடிப் பெறுவது குற்றமல்ல; உழைக்காமல் யாசகம் ஏற்பதுதான் குற்றம்!...ஆனால் படித்தும், பட்டம் பெற்றும் லஞ்சம் பெறும் அதிகார வர்க்கம்! உழைப்பவனைச் சுரண்டி உயிர்வாழும் பணக்கும்பல்! அவர்களைவிட இந்த ரிக்ஷாக் காரன்!......'

க்யூ முன்னேறியது. அந்த மனித ரயிலுக்கு நானே இஞ்சின். எனக்கு முன்னுள்ளவர் டிக்கட் வாங்கி விட்டார். நான் பணத்தை நீட்டினேன். ஆனால் புக்கிங் சாத்தப்பட்டது.

"இன்னம் ஒரு டிக்கட் ஸார்" என்றேன் நான்.

"எக்ஸ்க்யூஸ்மி" என்ற குரல் புக்கிங் அபீஸ் பலகைக்குப் பின்னிருந்து கேட்டது; பணத்தைப் பையில் போட்டுக் கொண்டு வெளி வந்தேன்.

க்யூ கலைந்தது. என் இதய நிறைவு சொல்லிற்று: "சேற்றிலே மலர்ந்த செந்தாமரைகளை மினர்வா டாக்கீஸுக்குள்ளேதான் காண முடியுமா? வெளியேயும் காண முடியாதா?"

—1947

# நீயும் நானும்

அன்புள்ள ரகுநாதா,

நமஸ்காரம்.

'ஏதடா, ஆசாமி புதிதாகக் கடிதம் எழுதுகிறானே, என்று எண்ணாதே. ஏதோ ஒரு உற்சாகம். உற்சாகமா அது? புழுக்குடைவதுபோல் என் நெஞ்சை உறுத்திக் கொண்டிருக்கும் அந்த நினைவு...அதன் இன்பம்! அதன் வேதனை!.... உன்னைப்போல் நான் பெரிய கதாசிரியனல்ல. என்னைப்போல் நீயும் தொழிலாளர் தலைவனல்ல. ஆனால், நீ நானானால் அல்லது நான் நீயானால்......அப்போது இந்தக் கடிதத்துக்கே அவசியமிருக்காது. உன்னுடைய அரசியல் அபிப்பிராயங்கள் எப்படி இருந்தாலும் சரி. அதைப் பற்றி நான் கவலை கொள்ளவில்லை. உன்னைப்போல் என்னிடம் கற்பனை வளமோ மொழிச் சிறப்போ கிடையாது. ஆகவேதான் அன்றிரவில் நடந்த அந்தக் கோரச் சம்பவத்தை, மகத்தான சரித்திரத்தை உனக்குத் தெரிவித்து, என் மன உறுத்தலைத் தணிக்க விரும்புகிறேன்.

அந்த இரவை நினைத்துப் பார்த்தால்!'......

சார்லிப்பட்டிக் கொலை வழக்கு விவரங்களைப் பத்திரிகைகளில் படித்திருப்பாய். மில் முதலாளிகளின் கைக்கூலி ஒருவன் அங்கு நடந்த கலவரத்தில் மாண்டு போனான். ஆனால் அந்த மரணம் திட்டமிட்டுத் தொழிற் சங்கம் செய்த சதி—கொலை என்றது வெள்ளை நிர்வாகம். போலீசாரைக் கேட்க வேண்டுமா? மாட்சிமை தங்கிய வெள்ளைத் தோலின் உத்தரவுப்படி என் மீதும்,

சங்க ஊழியர்கள் மீதும் வாரண்ட் பிறப்பித்தனர். தொழிலாளர்களின் கட்டுப்பாட்டைக் காக்கவும், அமைதியை நிலை நாட்டவும் வேண்டி, நான் தலைமறைவாய் இருக்கவேண்டுமென்று கட்சி உத்தரவிட்டது.

அப்பா! தலைமறைவாக வாழ்வதென்பது அத்தனை சுலபமான காரியமா? ஆனால், அதே சமயம் சர்க்கார் ஆள் தூக்கி அவசரச் சட்டத்தைக் கொண்டு வந்தது. உடனே அடக்குமுறை; கட்சித் தோழர்கள் வேட்டை; வேலூர் சிறை; விசாரணையற்ற சிறை வாசம்!......

ஒரு நாள் திடீரென்று சார்லிப்பட்டியில் தொழிலாளர்களுக்கும் குண்டர்களுக்கும் கைகலப்பு ஏற்பட்டுவிட்டது. இதுதான் சமயமென்று போலீஸார் தலையிட்டுத் தொழிலாளரைத் தாக்கினர். கண்ணீர்ப் புகை; துப்பாக்கிப் பிரயோகம்; 144; ஸ்பெஷல் போலீஸ் முதலிய அஸ்திரப் பிரயோகங்கள்!....

அன்று மாலை எனக்கு உத்தரவு வந்தது. உடனடியாகச் சார்லிபட்டிக்குச் சென்று, தொழிலாளரைச் சந்தித்து நிலைமையைத் தெரிந்து, வேண்டுவன செய்யவேண்டும் என்று கட்சி உத்தரவிட்டது.

சார்லிப்பட்டிக்கும் நான் பதுங்கியிருந்த 'வளை'க்கும் சில மைல் தூரம்தான் இருக்கும். இரவோடு இரவாய்ச் சைக்கிளில் அங்கு சென்று தோழர்களைச் சந்திக்க வேண்டும். ஊர் நிலைமை ஒரு புறம்; ஏற்கனவே வலைக்குள் சிக்காது அஞ்ஞாதவாசம் புரியும் என் நிலைமை ஒருபுறம்.

அன்றிரவு எட்டு மணிக்கே புறப்பட்டேன்.

பூசி மெழுகியதுபோல் வெண் மேகங்கள் நிலவை மறைத்திருந்தன. மெல்லிய பனித் திரை கண் முன்னே தொங்கிக்கொண்டிருந்தது. அழுது வழியும் நிலவொளியில் சைக்கிளை மிதித்துக்கொண்டு வந்தேன். தலையிலே முண்

டாசு. உதட்டில் சிகரெட். எனினும் பற்கள் மோதிக் கொண்டன. சர் சர் என்று மணல் வெளியில் மிதித்து, ஒரு மட்டும் ஊர் எல்லையை அடைந்துவிட்டேன். வாய்க்கால்ப் பாலம் கழிந்ததும், இருள் செறிந்த இடத்தில் சைக்கிளை நிறுத்திவிட்டு, மீண்டும் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தேன். என்னை அழைத்துச் செல்ல 'கொரியர்' (கையாள்) வரக் காணோம். அப்போது பாலத்தருகில் இரண்டு சி. ஐ. டிக்கள் வந்து கொண்டிருந்தார்கள். உடனே சிகரெட்டைத் தூர எறிந்துவிட்டு, அவர்கள் கண்ணிலிருந்து தப்புவதற்கு வழி தெரியாமல் நான் சைக்கிளில் ஏறி, ஊரைப் பார்த்து அழுத்தினேன்.

இனி நான் 'கொரிய'ரை எதிர்பார்க்க முடியாது. நானாக 'வளை' தேடிக்கொள்ள வேண்டியதுதான். வரும்போது எங்கு இறங்குவது என்பது பற்றியே யோசனை.

ஊருக்குள் ஜன நடமாட்டமே இல்லை. விடிந்துவிட்டது என்று ஏமாந்த காக்கை கா கா என்று கத்தி விட்டுச் சென்றது. வருகிற வழியில் ஒரு கடையின் சரப் பலகையிலிருந்த இரண்டு ஸ்பெஷல் போலீஸ் நபர்கள் தமது கற்பழிப்புப் பிரதாபத்தை அளந்து கொட்டிக்கொண்டிருந்தார்கள். தூரத்திலே 'நைட் ஷிப்ட்' ஓடும் மில்லின் யந்திர ஒலம். அதையடுத்து பாராப் போலீஸின் விசில் கீச்சுச் சப்தம்; 'ரிலே ரேஸ்' மாதிரி எங்கோ ஆரம்பித்த பட்டி நாய்களின் பிலாக்கண ஊளை நான் வந்து கொண்டிருந்த தெருவிலே வந்து முடிந்தது...

மேலத்தெரு சீனிவாசன் வீட்டு முன்னால் இறங்கினேன். கதவு மூடியிருந்தது.

நான் கதவைத் தட்டினேன்.

பதிலில்லை.

"மிஸ்டர் சீனிவாசன்!"

கதவிடுக்கு வழியாகப் பார்த்தேன். உள்ளே விளக்கு ஏற்றப்பட்டது. சீனிவாசன் குரல் கொடுத்துக் கொண்டே கதவைத் திறந்தார்.

“யாரது?”

“நான் தான்.”

“யாரு நீங்களா?”

நான் பதில் சொல்லாமல் சைக்கிளை உள்ளே எடுத்து வைத்தேன்.

“சரி, சாப்பாடு ஆச்சா? மாடிக்குப் போங்கள்.”

நான் மாடிக்குச் சென்றேன். அவரும் உடன் வந்தார்.

“காம்ரேட், நீங்க உடனே யூனியன் ஆபீசுக்குப் போயி தகவல் சொல்லி, ‘கொரிய’ரை இங்கே வரச் சொல்லணும்.”

“சரி. சாப்பாடு?”

“எல்லாம் வந்து பார்த்துக்கலாம்.”

சிகரெட்டுக்காகப் பாக்கெட்டைத் துழாவினேன்; பாக்கெட் காலி. சீனிவாசனைப் போகச் சொல்லிவிட்டு, விளக்கை அணைத்து விட்டு ஈஸிச்சேரில் சாய்ந்தேன்.

கீழே பேச்சுக்குரல் கேட்டது.

“இந்தாங்க, உயரே போனது யாரு?”—கேட்டது அவர் மனைவி.

“அவர் தான், யூனியன்...”

“யாரு—அந்தக் கொலைகாரனா?”

என் நெஞ்சுக்குள் சுளுக்குவது போலிருந்தது.

“அநேகத்தைக் கண்டுட்டே. சும்மா இரி” என்று அதட்டிவிட்டு, சீனிவாசன் புறப்பட்டார்.

“எங்கே போறிய?”

கேள்விக்குப் பதில் வரவில்லை.

கண்களை இறுக மூடியவாறே சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

—"கொலைகாரனா?"

சீனிவாசன் கட்சி அனுதாபி; செயலுள்ள மத்திய தர வகுப்பு ஆசாமி. கட்சியிலே நேரடியாகக் கலந்து கொள்ளா விட்டாலும், தம்மாலான உதவிகளை அடக்கத்தில் செய்து தருவார். அவருடைய மனைவி படித்தவள்; எனினும் மமதை கொண்டவள். 'வெள்ளை வேட்டிப் பண்டார'மாகிய சீனிவாசன் எங்களைப்போல் 'அட்டுப் பிடித்த, நாகரிகமற்ற' தொழிலாளர்களிடம் பழகுவது அவளுக்குப் பிடிக்கவில்லை. மேலும், சோஷியலிஸம் என்பது சொத்தைப் பறிப்பது என்ற பயங்கர எண்ணமும் எங்கள்மீது வெறுப்பைத் தூண்டியிருந்தது.

அவள் என்னைக் கொலைகாரன் என்றதில் தவறில்லை. அவளா பேசுகிறாள்? அவளுள்ளே குடிகொண்ட மத்தியதர வர்க்கத்தின் போலிக் கௌரவப் பூச்சாண்டியல்லவோ பேசுகிறது!....

அவள் கீழே இருந்து என் காதில் விழும்படி ஏதேதோ சாடை பேசினாள்: "என்னமாத்தான் பிழைக்கிறாங்களோ?— பகல் முச்சூடும் ஆந்தை மாதிரி பொந்திலே கிடந்துட்டு ராவிலே சுத்தறது—முழிக்கிற முழியைப் பாரு. குறவன் மாதிரி—எல்லாரும் சமம் சமம்னுட்டு, ஆம்பிளெயும் பொம்பிளெயும் ஒண்ணுத்தான் பழகுதானுக. தூ! மூதிக"

அவளுடைய பேச்சு தங்கு தடையின்றிச் சென்றது.

"என்ன பார்வதி? சீனி வீட்டிலே இல்லையா?" என்ற குரல் கேட்டது.

பக்கத்து வீட்டுச் சதாசிவ மாமா குரல்தான் அது.

"இல்லாமே என்ன? இப்பத்தான் திடீரென்று அழைப்பு வந்திட்டுதே."

இருவரும் 'கசமுச' என்று ஏதோ பேசிக்கொண்டனர். சதாசிவம் மாடிப்படி ஏறினார்.

நான் நிமிர்ந்து உட்கார்ந்தேன். விளக்கைப் போட்டேன்.

அவர் வந்ததும் வராததுமாய்ப் பேச ஆரம்பித்து விட்டார்: "என்ன ஸார், இது! கீழே பாருங்க. சீனுவோட சம்சாரம் என்னமில்லாமோ சொல்றா! இந்த ரா வேளையிலே வந்து, சீனுவையும் வெளியே போகச் சொல்லிட்டு, நீங்க இங்கே இருக்கிறதுன்னா...பார்வதியும் வயசுப் பொண்ணு!"

அவருடைய மறைமுகமான குற்றச்சாட்டு என் மண்டையில் ஓங்கி அடிப்பது போலிருந்தது. ஆம். இந்தச் சமுதாயம் அப்படிப்பட்டது. வயதுவந்த மகளும் அப்பனும் நெருங்கிப் பழகினாலும் அவதூறு கிளப்புகின்ற முதலாளித்வ சமூக அமைப்பு....

"என்னை என்னவென்று நினைத்தீர்கள்?" என்று எதிர்த்தேன் நான்.

"தெரியும் சார். வீணா எதுக்கு அவங்க வெட்டிச் சனியனை விலைக்கி வாங்கணும்? நீங்களோ, பிடிவாரண்டுப் பேர் வழி!" என்று பதிலுக்கு அடித்தார் அவர்.

'நல்ல மாட்டுக்கு ஒரு சூடு'. எனக்கு மேலே பேச ஓடவில்லை. என்னுடைய மூட்டை முடிச்சுகளை எடுத்துக் கொண்டு சௌகரியத்துக்காக சைக்கிளை அங்கேயே விட்டு விட்டுக் கால் நடையாகச் செல்ல எண்ணிப் படி இறங்கினேன்.

என் காலில் கிடந்த புதுச் செருப்புக்கள் 'சறுக் சறுக்' கென்று ஓலமிட்டு, பயங்கரம் உண்டாக்கியது. ஆகவே

அமைதியுடன் செல்லுவதற்காக, அவற்றைக் கழற்றிக் கையில் தூக்கிக்கொண்டு அடுத்த 'வளை'யைத் தேடிச் சென்றேன்.

தூரத்தில் எங்கோ பனைமரத்தில் கோட்டான் அவயக் குரலில் குழறிச் சிறகடித்தது; வயற்காட்டுத் தவளைகளின் கடூரமான முணமுணப்பு; போலீஸ் காவலின் விசில்; சப் ஜெயில் மணியோசையின் மங்கிய ஒலி...

மணி பத்து அடித்தது.

அடிமேலடி வைத்து மெல்ல நடந்து சென்றேன். ஆனால் எனக்குப் பின்னால் நூறடி தூரத்தில் யாரோ என்னைத் தொடர்ந்து வருவது போன்ற பிரமை—பிரமையென்ன? இரண்டு மூன்று தெருக்களைப் பார்த்தேன். நிலவொளி மேகத்தால் விழுங்கப்பட்ட இருள் வேளையில், பக்கத்துச் சந்து வழியாகச் சென்று பல நெளிவு வளைவுகளைக் கடந்து வேறொரு தெருவுக்குத் தப்பி வந்தேன். பின்னால் வந்த ஆள் என்னைத் தொடர்ந்து வரவில்லை என்பதைத் தெளிவு படுத்திக்கொண்டேன்.

இனித் தெருக்காட்டில் அலைவது தப்பு என்று உணர்ந்து ராக்கன் வீட்டுக்குச் சென்று தங்க எண்ணினேன். ராக்கன் மில் தொழிலாளி, கட்சி உழைப்பாளி. அவனுடைய மனைவி மாரியும் அப்படித்தான். இருவரும் கட்சிக்காக மிகவும் பாடு பட்டிருக்கிறார்கள். மாரி கட்சி நிதிக்காக, தன்னிடமிருந்த ஒரே தங்க நகையான மூக்குத்தியையும் தந்து, உண்டியல் மூலம் பணமும் பிரித்துத் தந்தவள். இதற்கு முன் எத்தனையோ தடவை ராக்கன் வீட்டில் எனக்கு 'வளை' தந்து உதவியிருக்கிறார்கள்.

ராக்கன் வீட்டுக் கதவு திறந்தே கிடந்தது. முற்றத்தில் நிலவொளியில் மாரி தனது ஒன்றரை வயது ஆண் குழந்தையை மடியில் வைத்து, நிலாவைப் பூச்சி பிடித்துக் காட்டி விளையாடிக் கொண்டிருந்தாள். வாய் பேசத்தெரியாத

அந்தப் பாலகன் வாயிலிருந்து எச்சில் ஒழுக நிலவைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தான்.

நான் உள்ளே சென்றேன். மாரி நிமிர்ந்து பார்த்து என்னை அடையாளம் கண்டுகொண்டாள். "வாருங்க—நீங்க வாரதாக் கூட சேதி கிடையாதே" என்று கேட்டுவிட்டு, பாலகனைப் பார்த்து, "டே, ஜீவா! அய்யாவுக்கு 'லால் சலாம்' போடு" என்றாள். பையன் சிரித்தான். "போடு லால் சலாம்!" என்று மீண்டும் சொன்னாள்.

அந்தச் சிறுவன் தனது முஷ்டியை உயர்த்தி லால்சலாம் செய்தான்; நானும் பதிலுக்குச் செய்தேன். உடனே தெருக் கதவைச் சாத்தினேன். என்னைத் தொடர்ந்து வந்த பிராணி இங்கும் மோப்பம் பிடித்து வந்துவிடுமோ என்ற காரணகாரிய மற்ற பயப்பிராந்தி.

"ராக்கன் எங்கே?"

"எங்கே போயிரும்? யூனியன் ஆபீசுக் கிட்டெ தான் போயிருக்கும்."

நான் தலைப்பாகையை அவிழ்த்தேன்.

"சரி, நீங்க சாப்பிட்டாச்சா?"

"இல்லே."

"இருங்க, பழைய சாதம் அவருக்கின்னு இருக்கு. நீங்க சாப்பிடுங்க."

"ராக்கன் வந்தா என்ன பண்ணப்போறே?"

"அது மில்லு உட்டு வந்தவுடனேயே ஒரு வாய் சாப்பிட்டிரிச்சி. இப்ப வரச்சயே, எங்னெயாவது துன்னுட்டு வந்திரும்" என்று கூறிவிட்டு, வீட்டுக்குள் சென்று கஞ்சியும் சாதமுமாய்க் கொண்டுவந்து வைத்துவிட்டு, "வெஞ்சனம்கூட இல்லே" என்று பரிதாபப்பட்டாள்.

"பரவாயில்லே, ரெண்டு வத்தலும் உப்பும் இருந்தா நல்லது."

அவள் கொண்டுவந்தாள். நான் சாப்பிட்டு முடித்தேன். பிறகு நாக்கின் மழ மழப்பைப் போக்க, புகை வேண்டியிருந்தது. பாக்கெட்டிலோ சிகரெட்டில்லே; மாரியையும் இதற்காக வெளியில் போகச் சொல்ல மனமில்லே. சரியென்று மாடக் குழியில் தட்டுப்பட்ட பீடியொன்றை எடுத்துப் பற்ற வைத்தேன்.

மாரி தனது மகன் ஜீவாவை வைத்து விளேயாட்டுக் காட்டி உறங்கப் பண்ணிக்கொண்டிருந்தாள்.

"ஜீவா, அது யாருடா கண்ணு?" என்று கூறி என்னேச் சுட்டிக் காட்டினுள்.

"மாம்மா" என்று வாய் திறந்து ஒலி எழுப்பியது குழந்தை.

"சரி உறங்கு" என்று அவனே மடியில் போட்டுத் தட்டிக் கொடுத்தாள்.

"நான் போய்ப் படுத்துக்கிடுறேன்" என்று கூறி நான் வீட்டினுள் சென்றேன்.

மாடக் குழியிலே தகர விளக்கு புகை மண்டி எரிந்து கொண்டிருந்தது. ஓலேப்பிரை முகட்டில் எலிகள் குறுக்கும் நெடுக்கும் பாய்ந்து சல சலப்பு எழுப்பின. மூலேயிலே உள்ள பண்ட பாத்திரங்களிலிருந்து அழுகல் நாற்றம். நீரூற்றுச் சுரக்கும் மண் தரை, எதிரே சுவரில் மூங்கில் பட்டைகளால் கட்டப்பட்டிருந்த ஜன்னல் வழியே பின்புறத்துத் தென்னந்தோப்பு தெரிந்தது. தென்னே மட்டை வழியாக, சல்லடை போலப் பாயும் நிலவொளி...

நான் தலேயைத் தரையில் சாய்த்தவாறே, எண்ணினேன்: "எத்தனே பகட்டு நிறைந்த உலகமடா இது! இங்கு இந்த ஏழைகள் துன்பமே துணையாக வாழ்கிருர்கள். ஆனல்

இந்த ஏழை மக்களுக்குரிய கருணையும் அன்பும் கடமை உணர்ச்சியும் படித்தவர்கள் — பணமுடையவர்களிடம் இல்லையே! ‘இந்தப் பாமரர்கள் கல்வியற்றவர்கள்; கலாசாரம் தெரியாதவர்கள்; மனிதனாக வாழும் இரண்டு கால் ஜந்துக்கள்’ என்றெல்லாம் பெரியவர்கள் சொல்லுகிறார்களே. உண்மையில் மனிதத் தன்மையை விடச் சிறந்த கலாசாரமும் நாகரிகமும் வேறு உண்டா? பார்வதியைப் போல, ஈவிரக்க மற்ற, பகல் வேஷக்காரர்கள்!...”

மூட்டைக் கடி பொறுக்கமாட்டாமல் எழுந்து உட்கார்ந்தேன். தெருவில் ‘சறுக் சறுக்’கென்ற பூட்ஸ் சத்தம் கேட்டது; திடீரென்று ராக்கன் வீட்டு வாசலில் நின்றது; மறு நிமிஷம் கதவும் தட்டப்பட்டது.

“யாரங்கே?”

“யாரா? திற கதவை!”

எனக்கு விஷயம் புரிய வெகு நேரம் ஆகவில்லை. ‘அகப்பட்டுக் கொண்டோம். இனித் தப்ப வழியுமில்லை; நேரமுமில்லை’ என்று எண்ணி மூட்டை முடிச்சுகளை வாரிச் சுருட்டினேன்; விளக்கை ஊதி அணைத்தேன்; எதிர்த்தாற்போல் ஆளுயரத்திலிருந்த ஜன்னல் வழியே தப்பி ஓடலாமென்றால், அதிலுள்ள மூங்கில் பட்டைகளை முறித்தெறிவதற்குக் குறைந்த பக்ஷம் ஐந்து நிமிஷங்களாவது வேண்டும். அதற்குள் மாரி...உள்ளே ஓடிவந்தாள்; “என்னங்க, என்ன பண்றது?” என்று பரிதவித்தாள்.

“பரவாயில்லை. முடிஞ்சா அவனுங்களைக் கொஞ்சம் எப்படியாவது தயக்காட்டிரு...அதுக்குள்ளே...”

“சரிங்க”—அவள் வெளியே ஓடினாள்.

நான் மூங்கில் பட்டையில் கை வைத்து இழுத்தேன்; முற்றத்தில் என்ன நடக்கிறது என்பதையும் கதவிடுக்கு வழியாகக் கவனித்துக் கொண்டேன்.

வெளியே கதவு திறக்கப்பட்டது.

திறந்தவுடன் இரண்டு போலீஸ்காரர்கள் உள்ளே வந்தனர். ஒருவன் சட்டைக்கார சார்ஜெண்ட்; அடுத்தவன் ஸ்பெஷல் போலீஸ்.

"இங்கே யாரு இருக்கிறது?" என்று அதிகார தோரணையில் அந்த இரும்புச் சட்டி கவிழ்த்திய ஸ்பெஷல் போலீஸ் கேட்டான். மாரி குழைந்து குழைந்து சிரித்துக் கொண்டே, "நான் தானுங்க" என்ருள்.

அவள் இடுப்பிலிருந்த ஜீவா போலீஸ்காரருக்கு லால் சலாம் போட்டான்!

"ஓம் புருஷன்?"

"அவரு வெளியிலே போயிருக்காரு. வாங்க, இப்படி உட்காருங்க" என்று மார்பை நிமிர்த்திக் கொண்டு சாகசம் செய்தாள் மாரி. ஆனால் அவர்கள் அதற்கு மசியவில்லை.

நான் முதல் பட்டையை எடுத்துவிட்டேன்.

"சீ நாயே! உள்ளே ஒரு பய வந்தான்னு ஆள் சொல்லுது" என்று முறைத்தான் சார்ஜெண்ட்.

"யாரு, ஆளா? ஐயோ, நான் ஒண்டியாத்தானே இருக்கேன்" என்ருள் மாரி.

"ஓம் பேச்சை யார் நம்புறது? வீட்டைப் பார்த்துத் தான் ஆகணும்." நான் இரண்டாவது பட்டையைப் பிடுங்கி விட்டேன். மாரியால் இனிக் குழைய முடியாது. எதிர்த்துப் பேசினுள்: "ஆம்புளே இல்லாத வீட்டிலே வந்து அதட்டு றியளே!" என்ருள்.

"சீ தேவடியாமுண்டே! வாயைப் பாரு. டே 144! உள்ளே போய்ப் பார்த்துட்டுவா!" என்று உத்தரவிட்டான் சார்ஜெண்ட்.

"பார்க்க முடியாது!" என்று கோபாவேசமாய் வழி மறித்தாள் மாரி.

நான் மூன்ருவது பட்டையையும் எடுத்தெறிந்து விட்டேன். அந்தப் போலீஸ்காரன் அவளைத் தள்ளி விட்டு முன்வர எண்ணினுன். அவளோ "நீ உள்ளே போறதைப் பார்த்துப்புடுதேன்" என்று முண்டி விழுந்து வழிமறித்தாள். நான் நாலாவது பட்டையைத் தொட்டுவிட்டேன். அதையும் எடுத்து விட்டால், வெளியே தாவிவிட முடியும்!...

மாரியின் வழி மறிப்பு ஓரளவுக்குத்தான் பலித்தது. மறு கணம் நான் பிடிபட்டிருப்பேன். ஆனுல், அவள் செய்த அந்தக் காரியம்! திடீர் என்று ஒரு சப்தம்; கிரீச் சென்ற கூக்குரல்...ஐயோ என்ற அலறல்!—

அப்பா! என்ன கோரம்!

மாரி, தான் பெற்ற பிள்ளையைத் தன் கையாலேயே நிலைக் கதவில் மோதி யறைந்தாள்! என் கண்கள் சுளுக்குவது போலிருந்தன.

மறுகணம் "ஐயோ! குழந்தையைக் கொன்னுட்டானே பாவி, கொன்னுட்டானே" என்று ஓலமிட்டாள் மாரி.

உடைபெற்ற முட்டையின் கருச் சிதைவு போல அந்தப் பாலகனின் மண்டை சிதறி, கூழும் நுரையுமாய் சிந்திப் பரவி யிருந்தது. செக்கச் சிவந்த ரத்தம் தரையிலும், சார்ஜெண்டின் உடையிலும் நிலையிலும் தெறித்திருந்தது!

நான் பட்டையை எடுத்துவிட்டேன். தலையை உள்ளே கொடுத்தேன்.

அதற்குள் முற்றத்தில் அக்கம் பக்கத்துத் தொழிலாளர்கள் எல்லாம் மாரியின் குரல் கேட்டு ஓடிவந்தனர். அந்தச் சார்ஜெண்டும் போலீசும் திகைத்து மரமாய் நின்றனர். இம்மாதிரியான தாக்குதலை அவர்கள் எதிர்பார்க்கவில்லை.

பெற்ற தாயேதான் கொன்ருள்: எனினும் பிறன் மேல் குற்றம் சாட்டுகிருள்! உலகம் எதை நம்பும்....?

நான் ஜன்னல் வழியாகத் தாவிக் குதித்து, தென்னந் தோப்பு வழியாகத் தப்பித்து ஓடி, இன்னொரு 'வளை'யை நாடி ஓடினேன்...போகும்போதே நினைத்தேன்: 'அப்பா! மாரியின் தியாகம் எவ்வளவு மகத்தானது! அதைவிட, அந்தப் பாலகன் ஜீவா!...அந்த நள்ளிரவில் எங்கள் செங்கொடி மேலும் சிவப்பேறியது. அந்தப் பச்சைப் பசும் பாலகனின் தியாகத்துக்கு எங்கள் கட்சி முழுதுமே தலை வணங்க வேண்டும்!'

எப்படி இருக்கிறது பார்த்தாயா?

"அட, பாவிகளா! ஒரு மனிதன் ஆபத்திலிருந்து தப்பு வதற்காக, ஒரு தாய் தன் மகனையே கொல்வாளா? இது எங்கேயும் நடக்கக் கூடியதா?" என்று நினைக்கலாம். ஆம். 'கற்பனையைவிட அதிசயமாகத்தான் இருக்கிறது உண்மை!'

ரகுநாதா, என்ன இருந்தாலும் நீ ஒரு கதாசிரியன். ஆனால் இன்றைய கதாசிரியர்களான நீயும் உன் சகாக் களுமோ...? நீங்கள் இன்றும் எதைப்பற்றி எழுதிக் கொண்டிருக்கிறீர்கள்? தான் பெற்றெடுத்த குழந்தை யின் பசி முகத்தைக் காணப் பொறுக்காத தாய் அந்தக் குழந்தையை நல்லதங்காளைப்போல் கிணற்றில் தள்ளிக் கொலை புரியும் அவல நிலையை உருக்கமாகச் சித்திரிக்கிறீர்கள். வாழ்வுப் போராட்டத்தில் வழிவகை தெரியாது இருளில் கிடந்து மாண்டு மடியும் அப்பாவி மக்களின் துன்பங்களை வருணிக்கும் அழுகுணிச் சித்தர் களாக வேஷம் போடுகிறீர்கள். ஆனால், இன்றைய உலகம் அதுவல்ல. உங்கள் 'அனுதாப'த்துக்குரிய அந்த மக்கள் உங்களைப் போல் இன்று ஒப்பாரி வைத்துக் கொண்டிருக்கவில்லை. நமது பெண்கள் மகோன்னதமாக வளர்ந்துவிட்டார்கள். தான் பெற்றெடுத்த பிள்ளையை நேசிப்பது போல், உலக மக்கள் அனைவரையும் நேசிக்கும்

தாய்மார்கள் தோன்றிவிட்டார்கள், ஐயாயிரம் தொழிலாளிகளின் நலனுக்காக, தங்கள் வர்க்கத்தின் நலனுக்காக, வெற்றிக்காக, தம்மையும் தம் குழந்தைகளையும் பலியிடும் வீரத் தாய்மார்கள் தோன்றிவிட்டார்கள் !

அவள்—மாரி செய்தது கொலைதான் ! ஆனால் அடுத்த தடவை அவளை நான் சந்தித்தபோது அவள் என்ன சொன்னாள் தெரியுமா? "என்னங்க இந்தப் புள்ளெ செத்தா இன்னும் ஒரு வருஷத்திலே இன்னொரு புள்ளெ பெத்திடுவேன், ஆனா, நம்ம சங்கம் செத்தா..." என்று கம்மியடைத்த குரலில் கூறியவாறே கண்ணீர் பெருக்கினாள் மாரி.

ஆம். அவள் புரட்சிப் பாதையிலே வீரநடை போட்டுச் செல்லும் புதுமைப் பெண் ! அந்தப் பாலகனின் ஒவ்வொரு சொட்டு ரத்தத்திலிருந்தும் மஹிராவணனைப்போல் ஆயிரமாயிரம் வீரர்கள் தோன்றுவார்கள்.

எங்கள் கருத்துக்களே உனக்கு வெறும் ரத்த வெறியாகப் படலாம். கதாசிரியர்களான நீங்கள் கம்பன் அன்றே பொதுவுடைமைக் கனவு கண்டு விட்டான் என்பீர்கள். எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்று வெறுமனே பஜனை பாடுவீர்கள். ஆனால் அந்தக் கனவைப் பிரத்தியட்ச உண்மையாக்கும் போராட்டத்தில், ஒரு துரும்பைக்கூட எடுத்துப் போட முன்வரமாட்டீர்கள். சமூகம் தானாகவே மாறும் என்று சொல்லும் வர்க்கப் போராட்டத்தின் வைரியான கிரென்ஸ்கிய சமரசவாதியல்ல நான். சமூகத்தை நாமேதான் மாற்றியமைக்க வேண்டும். மாற்றியமைக்க முடியும் என்று நம்புகிற முற்போக்கு வாதி நான்.

நித்த நித்தம் செத்துக் கொண்டிருக்கும் சாவுப் போராட்டத்தில் வெற்றி பெறுவதைவிட, வாழ வேண்டும் என்ற உரிமைப் போராட்டத்தில் செத்து மடிந்தாலும்

அதுவே வெற்றி. இந்த உண்மையைத்தான் மாரியும் அவளது வர்க்கமும் தங்கள் தியாகத்தின் மூலம் நமக்குக் கற்றுக் கொடுக்கிறார்கள்.

ஆனால், இந்தக் கருத்துக்களை யெல்லாம் நீ எவ்விதம் ஏற்றுக் கொள்ளப் போகிறாயோ? எங்கள் வாழ்க்கையில் இதுபோல ஏடும் நாடும் அறியாத எண்ணற்ற தியாக சரித்திரங்கள். அவற்றை அறிந்து கொண்டால்—?

சொன்னதையே நான் சொல்கிறேன். நான் கலைஞன் அல்ல. நான் நீயாக முடியாது. ஆனால் நீ நானாக முடியும். ஆகவே வாழ்வின் குரூர வசீகரங்களைக் காண என்னிடம் வருகிறாயா? வா, வா, உன்னை மட்டுமல்ல. உங்கள் குலத்தையே அழைக்கிறேன்.

அன்புள்ள,

..............................

1947.

# கேள்வியும் பதிலும்

## 1

ஜனப் பிரவாகம் அலைமோதிச் சிதறும் சங்கம முகமான நகரத்தின் நாற்சந்தி மூலையிலே அவன் கிடந்தான்......

நாகரிக உலகின் பிரஜைகள் வெறிகொண்ட வியாபாரச் சூதாட்டம் மாதிரி காலத்தோடு போட்டி போட்டுக்கொண்டு மேலும் கீழும் இயங்கிக் கொண்டிருந்தார்கள் ; அவசர யுகத்தின் அசுர வேகத்தைப் பேய் வேகத்தில் செல்லும் கார்களும் வாகனங்களும் அளந்து காட்டுவது போலிருந்தன.

அவனுக்கு எந்தவித அவசரமும் இல்லை; அவனைப் பொறுத்த வரையில் காலமே ஸ்தம்பித்து நின்றுவிட்டது போலிருந்தது. அவன் அசைவற்றுக் கிடந்தான்—அரையில் அரை முழத் துணியற்று, நிர்வாணமாக, பிறந்த கோலமாகக் கிடந்தான்.

அந்த நாற்சந்தி வீதியிலே எத்தனை எத்தனையோ கோலாகலங்கள்.......

காம தேவனின் திருப்பவனிக்குப் பதாகைகள் கட்டிய மாதிரி வானவில்லின் வர்ண விஸ்தாரம் நிறைந்த பட்டும் துணியும் ஜவுளிக் கடைகளின் முகப்பில் தொங்கிக் கொண்டிருந்தன : 'ஸீஸன்' பட்டாடை புனைந்த சித்திரப் பாவைகள் எனக் கண்ணாடி அரங்குகளிலே

விளம்பரப் பொம்மைகள் நின்றன. தலையும் கரமும் அற்ற முண்ட உருவங்களான விளம்பர 'டார்ஸோ'க்கள் செதுக்கிவிட்ட பம்பரக் காய் போன்ற மார்புக் குவட்டில் 'ஸாட்டின் டைட் பிராஸ்' பாடிகளைத் தரித்து நின்றன; பிளாஸ்டிக் ரிப்பன்களும், பாரசூட் சில்க்குகளும் காற்றில் ஊசலாடின.

பட்டும் துணியும் கொட்டிக் கிடக்கும் அந்தப் பட்டணத்து வீதியிலே அவன் கூச்சம் மறைக்க ஒரு முழக் கந்தையற்று, குளிர் தடுக்க ஒரு முழக் கிழிசலற்றுக் கூனிக் குறுகிக் கிடந்தான்......

வீதி எங்கணும் பல புத்தகக் கடைகள்; பத்திரிகை ஸ்டால்கள். அந்த ஸ்டால்களிலே சூரிய ஸ்நானத்தின் மகிமையை விளக்கும் நிர்வாண மங்கையரின் சித்திரங்கள் தொங்கின; பாலித் தீவின் பருவக் குமரியரின் மேனியழகை மூவர்ணச் சித்திரமாக்கிக் காட்டும் திரையுலக சஞ்சிகைகள் தொங்கின; பாரீஸ் நகரத்தின் அர்த்தசாமக் கேளிக்கைகளை வருணிக்கும் பத்திரிகைகள் இருந்தன; மானிட மர்மங்களையும் காதல் ரகசியங்களையும், அதிசயக் கொலைகளையும் விவரித்துக் கூறும் அமெரிக்க சஞ்சிகைகளும் அலங்கரித்தன.

வீதியில் பற்பல மனிதர்கள் வந்தார்கள்; சென்றார்கள். ஆவியம்பூந் துகில் அணிந்த நாகரிக நாரீமணிகள் வந்தார்கள்; பீரங்கிகளும் துப்பாக்கிகளும் தீட்டப் பெற்ற அமெரிக்க 'பீச் ஷர்ட்' அணிந்த மேனு மினுக்கி வாலிபர்கள் திரிந்தார்கள்; கிளாஸ்கோ மல்லும் ஜரிகை உருமாலும் தரித்த செல்வந்தர்கள் சென்றார்கள்; அத்தாட்சி பெற்ற கதராடை புனைந்த சுத்த சுதேசிப் பிரமுகர்களும் வந்தார்கள்.

யாரும் அவன் கிடக்கும் நிலையைக் கண்டு பரிதாபப் படவில்லை. சிலர் முகத்தைக் கோணினார்கள்; சிலர் காறி உமிழ்ந்தார்கள்; சிலர் அவன் நிலையைக் கண்டு

வாய் விட்டுச் சிரிக்கவும் செய்தார்கள். அவனது நிலையைக் கண்டு அடுக்கு மாளிகைகளிலே தொங்கும் சாளரத் திரைகள் சிரித்தன; ஜவுளிக் கடைகளில் தொங்கும் ஜரிகைத் துகில்கள் சிரித்தன; சூரிய ஸ்நான மங்கையர் சித்திரங்கள் சிரித்தன; பக்கத்துச் சர்க்கார் கட்டிடத்தில் பறந்து கொண்டிருந்த கொடியும் சேர்ந்து சிரித்தது...

அவன் கண்களில் எதுவும் படவில்லை; காதில் எதுவும் கேட்கவில்லை. கடைசியில் ஒரே ஒருவனின் திருக் கண்களின் முழுக் கவனமும் அவன்பால் திரும்பியது.

"யாரடா நீ? இதென்ன ரோடா, பள்ளியறையா? எழுந்திரு, ஊமைப் பாசாங்கா பண்றே?"

அவனது ஒடுங்கிய வயிற்றில் எட்டி உதைத்து எழுப்பிக் கொண்டே சத்தமிட்டான், சட்டத்தின் பாது காவலனை ஒரு போலீஸ்காரன்.

2

"ஏம்பா, கையெழுத்துப் போடத் தெரியுமா?"

போலீஸ் ரைட்டர் அவனை விசாரித்துக் குற்றப் பதிவு செய்து முடித்த பின்னர், அவனை நோக்கிக் கேட்டார். அவன் தெரியும் என்ற பாவனையில் தலையை அசைத்தான். நடு ரோட்டில் நிர்வாணமாகக் கிடந்து, பிரஜைகளுக்குத் தொல்லை கொடுத்ததாக, அவன் மீது வழக்கு பதிவு செய்யப் பட்டது. கைகள் நடுநடுங்க அவன் கையெழுத்திடுவதைப் பரிதாபகரமாகப் பார்த்துக்கொண்டு நின்றான் நம்பர் முன்னூத்தி மூன்று. அவன் நின்ற ஆபாசக் கோலத்தைக் காணச் சகிக்காமல், முன்னூத்தி மூன்று தன் தலையில் பணிக்காகக் கட்டியிருந்த சிட்டுத் துண்டை அவிழ்த்து அவனைக் கட்டிக் கொள்ளச் செய்தான்.

"என்ன, த்ரீநாட்திரீ! உமக்கு இவன் புண்ணியத்திலே ஒரு துண்டுக்குக் கெட்ட காலம் புடிச்சுதாக்கும்?" என்று

சிரித்துக் கொண்டே கூறிவிட்டு, பதிவுப் புத்தகத்தை மூடி வைத்தார் ரைட்டர்.

''என்ன செய்றது? பார்க்கச் சகிக்கலே'' என்று அசட்டுச் சிரிப்போடு அங்கலாய்த்துக் கொண்டான் முன்னூத்தி மூன்று.

''சரி. இவனை லாக்கப்பிலே தள்ளுங்க. காலையிலே கோர்ட்டில் ஆசர்ப் படுத்தனும்'' என்று உத்தர விட்டார் ரைட்டர்.

முன்னூத்தி மூன்று அவனை நோக்கிக் கூப்பிட்டான் :

''இன்னம் ஏன் நிக்கிறே? வா உள்ளே.''

அவன் ஒன்றுமே பேசாமல் முன்னூத்தி மூன்றைப் பின் தொடர்ந்தான். முன்னூத்தி மூன்று அவனை லாக்கப் அறைக்குள் விட்டுப் பூட்டி விட்டுத் திரும்பினான்; திரும்பியவன் ஏதோ சிந்தித்தவன்போல் மீண்டும் லாக்கப் பக்கம் திரும்பி மெதுவாகக் கேட்டான் :

''ஏம்பா? பசிக்குதா?''

அவன் தலையை அசைத்துக் காட்டினான்.

''இரு, வாரேன்'' என்று கூறிவிட்டு, முன்னூத்தி மூன்று ஸ்டேஷனுக்கு எதிரேயிருந்த நாயர் டீ ஹோட்டலை நோக்கிச் சென்றான்.

இருள் மண்டிக் கிடக்கும் அந்த லாக்கப் அறையை அவன் உற்று நோக்கினான். கண்களுக்கு எதுவுமே தெரியவில்லை. ஒரே இருள்தான் கப்பிக் கவிந்து கிடந்தது; கீலெண்ணெயும் மூத்திரமும் கலந்த நெடி நாற்றம்தான் மூக்கைத் துளைத்தது; கொசுக் கூட்டத்தின் இரைச்சலும் காதைக் குடைந்தது.

கன்னத்தில் சுரீரென்று கடித்த கொசுவை அடிக்க முயன்று அவன் தன்னைத் தானே செவிட்டில் பளீரென

அறைந்து கொண்டான். அந்த அடியின் சூட்டால், அவனுக்குத் தன் நினைவே திரும்புவது போலிருந்தது. நிற்கச் சக்தியற்றுத் தளர்ந்து போயிருந்த அவன் லாக் கப்பின் அளிக் கதவைப் பிடித்தவாறே கீழே சரிந்து படுத்தான்.

போலீஸ் ஸ்டேஷன் சேகண்டி மணி கணீரென்று ஒரு முறை ஒலித்து ஓய்ந்தது. அலை பரவிச் சிதறும் அந்த ஓசையின் ரீங்காரம் அவனது மூளையுள் புகுந்து அதைச் சிலுப்பி உணர்வூட்டிவிட்டது. அவன் மனத்திலே தோன்றிய சிந்தனையால் வாடிய உதட்டில் ஒரு புன்னகை வதங்கிச் சாம்பியது. தூக்கம் கலைந்து உசும்பியெழுந்த சிந்தனை திக்குத் திசையற்றுத் திரியத் தொடங்கியது.

—சில மணி நேரத்துக்கு முன் நான் என்ன நிலையில் கிடந்தேன்? இந்த உடம்பில் விரற்கடை அகலத் துணியில்லை; நான் யார், ஏன் இந்தக் கதிக்கு வந்தேன் என்று கேட்பதற்குக்கூட நாதியில்லை; குடல் விழுங்கும் பசியால் நான் துடித்த போது, எனக்காகப் பரிதாபப்பட ஒரு ஆளில்லை. இப்போதோ....? இவ்வளவு நேரத்துக்குள் என்ன மாறுதல்! இடையிலே நாலு முழத் துண்டு; என் பெயரைக் கேட்டுப் பதிவு செய்ய ஒரு போலீஸ் உத்தியோகஸ்தன்; என் நிலையைக் கண்டு அனுதாபப்பட ஒரு போலீஸ்காரன். இந்த மாறுதல்; எப்படி நேர்ந்தது? ஏன் நேர்ந்தது?...

—ஏன்? ஏன்?...

—ஏனா? இதெல்லாம் சர்க்காரின் சட்டத்தை நிலை நிறுத்துவதற்காகத்தானே. நேற்று நான் ஒரு வாய்ச் சோறின்றி நாய் மாதிரி தெருத் தெருவாய் அலைந்தபோது, இந்த சர்க்காரோ, இதன் சேவகர்களோ என்னை ஏனென்று கேட்டார்களா? இன்று நான் கட்டியிருந்த கௌபீனத்தையும் தொலைத்துவிட்டு, மானம் மறைக்கக் கையளவுத் துணி

யின்றி, நடுத்தெருவில் வெம்பி வெதும்பிக் கிடந்தபோது மட்டும், அந்தப் போலீஸ்காரன் என்னை இழுத்து மிதித்துக் கொண்டு வந்துவிட்டானே. நான் நிர்வாணமாகக் கிடந்த தாகக் குற்றம் சாட்டி, அந்தக் குற்றத்தை நிரூபித்துச் சட்டத்தை நிலைநிறுத்தத்தானா இந்தத் தடபுடல்கள் எல்லாம்? எனக்கு இப்போது உடுக்கத் துணியும் உண்ண உணவும் படுக்க இடமும் கொடுக்க முன் வருவதெல்லாம் சட்டத்தை நிலை நாட்டுவதற்காகத்தானா? அட, தெய்வமே! எனக்கு உணவும் உடையும் கிடைக்க வழியிருந்தால், இந்தச் சட்டம் வழி செய்திருந்தால், நான் ஏன் இப்படிக் குற்றவாளி யாகிறேன்?

—தெய்வமே! இதென்ன உலகம்? இந்த உலகத்தின் சட்ட திட்டங்கள் எனக்குப் புரியவில்லையே! எனக்குக் கட்டத் துணியளிக்க முன்வராத இந்தச் சட்டம், நான் நிர்ப்பந்த வசமாய் நிர்வாணமாய் இருக்க நேர்ந்ததை மட்டும் குற்றம் சாட்ட முன் வருகிறதே! பட்டினி கிடந்து செத்துக்கொண்டி ருப்பதைக் கண் கூசாமல் பார்த்துக் கொண்டிருக்கும் இந்தச் சட்டம், பட்டினிக்குப் பயந்து சாகத் துணிபவனை மட்டும் குற்றவாளியாக்குகிறதே! இது மனிதர்கள் உண்டாக்கிய சட்டம்தானா? மனித உள்ளம் படைத்தவர்கள் உண்டாக்கிய சட்டம்தானா?...

—உலகில் எல்லோருமா மனித உள்ளம் படைத்த வர்களாய் இருக்கிறார்கள்? இன்று என்னைக் கைது செய்து சட்டத்தை நிலைநாட்ட வந்த போலீஸ்காரன் என்னை ஈவிரக்கமற்று எட்டி மிதித்தான்; இங்கேயோ இன்னொரு போலீஸ்காரன் என்னைப் பார்த்துப் பசிக்கிறதா என்று அனு தாபத்தோடு விசாரிக்கிறான். துப்பாக்கிகளோடும் குண்டுக ளோடும் பழகுபவனிடம்கூட மனித உள்ளம் இருக்கிறது. ஆனால் எல்லோருமா அப்படி இருக்கிறார்கள்? தெய்வ பக்தி யையும் திருநீற்று மகிமையையும் பற்றிப் பேசும் எத்தனை பெரிய மனிதர்கள் நெஞ்சில் ஈரமே அற்ற ஜன்மங்களாக

இருக்கிறுர்கள்! இதெல்லாம் ஏன் இப்படி? அவர்களெல்லாம் வாழ்வானேன்? நான் மட்டும் நாசம் அடைவானேன்?

—ஏன்? ஏன்? ஏன்?......

அவனது சிந்தனை அதிக நேரம் செயலாற்றவில்லை. களைத்துப்போன உடம்பும், ஒட்டி உலர்ந்த கும்பியும் அவனைச் சீக்கிரமே செயலற்றுச் சிந்தனையற்றுப் போகும்படி செய்தன; புத்தி மயங்கிவரும் சோர்வோடு அவன் விழுந்து கிடந்தான்.

வெளியே சென்றிருந்த முன்னூத்தி மூன்று கையில் ஒரு பொட்டலத்துடன் திரும்பி வந்தான். அவன் வரும்போது வாசலில் புதிதாக நின்றுகொண்டிருந்த 'ஸெண்ட்ரி டூட்டி' போலீஸ்காரன் முன்னூத்தி மூன்றைப் பார்த்து ஆவலோடு கேட்டான் :

''என்னண்ணே முன்னூத்தி மூணு. லாக்கப்பிலே புதுசா ஒருத்தன் கிடக்கானே, என்ன விசயம்?''

''அதுவா? நடு ரோட்டிலே அம்மணமாகக் கிடந்தான்னு டூ நாட் போர் சார்ஜ் பண்ணிக்கொண்டாந்திருக்காரு.''

''ஓஹோ, ஜிஞ்சர் பெர்ரியா?''

''ஜிஞ்சராவது பீராவது? அந்தக் கண்றுவியை ஏன் கேக்கறே? இரு, வந்து சொல்றேன்'' என்று கூறிவிட்டு உள்ளே சென்றுன் முன்னூத்தி மூன்று.

முன்னூத்தி மூன்று சென்றதும் அந்த ஸெண்ட்ரி துப்பாக்கியைத் தோளில் சாத்திப் பிடித்தவாறே மேலும் கீழும் இருமுறை பாரா நடந்தான்; பிறகு துப்பாக்கியை ஒருபுறமாக வைத்துவிட்டு, முன்னூத்தி மூன்றின் வருகையை எதிர் நோக்கித் தலையை உள்ளே நீட்டிப் பார்த்தான்.

"பனி என்ன இந்தப் போடு போடுது. ஏன் தம்பி, உங் கிட்ட பீடி இருக்குதா?" என்று கேட்டுக் கொண்டே முன் னூத்தி மூன்று வெளியே வந்தான்.

"இருக்கண்ணே."

இருவரும் ஸ்டேஷன் முகப்பிலிருந்த கைப்பிடிச் சுவரின் மீது அமர்ந்துகொண்டனர். சிறிது நேரத்தில் இருவரது பீடிகளும் விட்டுவிட்டுப் பிரகாசிக்கும் நெருப்புத் துண்டங் களாக ஒளி செய்யத் தொடங்கின.

"சரியண்ணே, அவன் விசயத்தைச் சொல்லு."

முன்னூத்தி மூன்று லேசாகப் பெருமூச்சு விட் டான்.

"கண்ருவி! அவனுக்கு ஊரு சேலத்துப் பக்கமாம். தறி நெசவுத் தொழிலாளியாம். இப்போதான் தறிகாரங்க புழைப்பிலே மண் விழுந்துட்டுதே. நூலு மில்லே; புழைப்பு மில்லே.

"ஊஹூம்! அப்புறம்" என்று ஆவலோடு பீடியை இழுத் துக்கொண்டே கேட்டான் ஸெண்ட்ரி.

முன்னூத்தி மூன்று புகையை ரசித்து வெளியிட்டவாறே மேலே தொடர்ந்தான்:

"புழைப்பில்லேன்னு, பின்னே பார்த்துக்கயேன். பெண் டாட்டி புள்ளெ எல்லாம் பட்டினி. எள்ளுப் புண்ணாக்கையும் புளியங்கொட்டையையும் தின்னு எத்தனை நாளைக்கு இருக்க முடியும்? புள்ளெ மண்டையைப் போட்டுடுச்சி, பஞ்சம் புழைக் கலாமின்னு பெண்டாட்டியும் இவனுமா புறப்பட்டுவந்திருக் காங்க."

"பெண்டாட்டி கதி என்ன ஆச்சி?"

"அவ கதி என்ன? அதுவும் இப்படித்தான். வாரவழியிலே வாந்திபேதி கண்டு அவளும் போயிட்டா. தூக்கிப் புதைக்கிற

துக்குக்கூட நாதியில்லாமெ இவன் அவனை அப்படியே போட் டுட்டு வந்திட்டானும். பெண்டாட்டி புள்ளெ ரெண்டும் போனவுடனேயே, இவனுக்கும் எங்கேயாவது ஆத்திலே கிணத்திலே விழுந்து சாகலாமான்னுதான் இருந்துதாம். இருந்தாலும் ஒவ்வொருத்தனுக்கும் அவனவன் உசுரு கருப் பட்டிதானே. சாக மனசு வரல்லெ...."

"அட போண்ணே! இப்படி லோல்பட்டுக்கிட்டுச் சீரழிய றதைவிட, ஒத்தை மனசா, உசிரை விட்டுட்டுப் போகலா மண்ணே!"

"தம்பி, நீ லேசாச் சொல்லிட்டே. பாரு. நான்தான் போன சண்டையிலே பட்டாளத்திலே இருந்தேனே, அப்பப் பாக்கணும், மனுசன் சாகிறதுக்கு எவ்வளவு பயப்படுவான் கிறதை. நான் என் கண்ணுலே பாத்திருக்கேன், தம்பி. எல்லாம் நாமும் அந்த நிலையிலே இருந்து பார்த்தாத்தான் தெரியும்."

"ஆண்டவன் புண்ணியத்திலே நமக்கு அப்படிக் கதி வராமே இருக்கணும், சரிண்ணே, கதையைச் சொல்லு." என்று ஆத்திரப்பட்டான் ஸெண்ட்ரி.

"ஏம்ப்பா? நான் சொல்றது உனக்குக் கதையாவா இருக்கு?...ம்" என்று முனகிவிட்டு, முன்னூத்தி மூன்று மேலே சொல்லத் தொடங்கினன்; "புழைப்புத் தேடி இங்கே வந்தானு? வந்தவன்பாடு இப்படி ஆயிடிச்சி. பசியும் பட்டினி யுமாகக் கிடந்து தவிச்சிருக்கான்; கடைசியிலே, கட்டிக்கிற துக்கு அரை முழத் துண்டுகூட இல்லாமல் இந்த அலங்கோலத் திலே கிடந்திருக்கான்..."

"பாவமாத்தான் இருக்கு" என்று சூள்கொட்டி அனுதா பப்பட்டுக் கொண்டான் ஸெண்ட்ரி.

"ஆமா தம்பி, உலகம் அப்படிப் போச்சு! உழைக்கிறவன் வாயிலேதான் மண்ணு. உழுகிறவன் வீட்டிலேதான் உப்புக்

கல்லுக்கே திண்டாட்டம்!" என்று சலித்துக்கொண்டான் மூன்னூத்தி மூன்று.

"நமக்கு எதுக்கண்ணே, இந்த வம்பு தும்பெல்லாம்? நாளைக்கு நம்மையும் தொப்பியைக் கழத்தி வச்சிட்டு நடை இறங்கச் சொல்லிட்டா, நம்ம கதி எப்படி எப்படியோ?" என்று நிர் விசாரமாகக் கூறிக் கொண்டே ஸ்டேஷனுக்குள் தொங்கும் கடிகாரத்தை ஏறிட்டுப் பார்த்தான்.

"பாத்தியாண்ணே, பேச்சுவாக்கிலே உக்காந்திட்டேன். மணி பத்தாகுது. நான் மணி அடிக்கணும்" என்று கூறி விட்டு, ஸெண்ட்ரி வராந்தாவின் மூலையை நோக்கிச் சென்றான்.

சேகண்டி மணி கணீர் கணீர் என்று பத்துமுறை ஒலித்து அடங்கியது. ஆனால், அந்த மணியோசை லாக்கப்புக்குள் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த அவன் காதில் உறைக்கவே இல்லை.

## 3

பெஞ்ச் கோர்ட்டுக்கு அருகிலுள்ள மணிக்கூண்டு மணி பத்து காட்டியது.

கோர்ட்டு வராந்தாவில் ஒரே ஜனக்கூட்டம். கருப்புக் கட்டிச் சிப்பத்தில் ஈ மொய்த்த மாதிரி இரைந்து கொண்டிருந்தது. போலீஸ்காரர்களும், விரும்பபடியில்லாத வக்கீல்களும் அங்குமிங்கும் திரிந்துகொண்டிருந்தார்கள். அங்காடிக் கூடைக்காரிகள், ரிக்ஷா வாலாக்கள், குமாஸ்தாக்கள் மற்றும் எத்தனை எத்தனையோ விதமான மக்கள் எல்லாம் அங்கு கசமுசத்துக் கொண்டிருந்தார்கள்.

அவன் அரையில் கட்டிய நாலுமுழத் துண்டோடு, கோர்ட்டு ஹாலின் ஒரு மூலையில் குந்தி உட்கார்ந்திருந்தான்.

அவன் பக்கத்திலே நம்பர் முன்னூத்தி மூன்று நின்று கொண்டிருந்தான். முன்னூத்தி மூன்றின் காருண்யத்தால் அன்று காலைச் சாப்பாடு கழிந்தது; காருண்யம் மிக்க கனம் கோர்ட்டாரவர்களின் தயவால் எத்தனை நாள் பிரச்சினை தீரப் போகிறதோ என்பதொன்றே அவன் கவலை.

நீதிபதி வந்து சேராததால், வேலைக்குப்போய் நாலு காசு பார்க்கவேண்டும் என்று தவித்துக்கொண்டிருந்த மக்கள் பொறுமையிழந்து புழுங்கிக் கொண்டிருந்தார்கள். சவாரிக்குப் போக முடியாமல் கோர்ட்டு வாசலில் வந்து மாட்டிக் கொண்ட ரிக்ஷாக்காரன் எல்லோருடைய காதிலும் விழும் படியாகத் தன் வயிற்றெரிச்சலைக் கொட்டித் தீர்க்க முனைந்தான்.

“பாருங்கய்யா, இந்த அநியாயத்தை! நேத்து எனக்கு ரிக்ஸா சத்தத்துக்குக்கூடக் காசு கிடைக்கெல்லெ. போலீஸ் கார ஐயாவுக்கு நான் படியழுது தொலைக்கலைங்கிறதுக்காக, நான் ‘ராங்ஸைடி’லே போனேன்னு என்னை அவரு அனியாயமா சார்ஜ் பண்ணிப்புட்டாரு. நானும் பத்து வருசமாத்தான் ரிக்ஸா ஓட்டுறேன். நானு ‘ராங் ஸைடி’லே போவேன்? இவரு, இவரு கெவருமெண்ட் எல்லாம்தான் ‘ராங்ஸைடி’லேயே போயிக்கிட்டிருக்கு. ஆமா!”

அவனது அங்கலாய்ப்புக்காகப் பரிதாபப்பட அங்கு யாருமே முன் வரவில்லை. வெளி வராந்தாவின் மூலையில் ஒரு கூடைக்காரக் கிழவி ஒப்பாரி வைக்காத குறையாக அழுது கொண்டே இருந்தாள்.

அவன் இந்தக் காட்சிகளை யெல்லாம் நிர்விசாரமாய்க் கவனித்துக் கொண்டிருந்தான். மற்றவர்களைப் போல் அவனுக்கு எந்தவித அவசரமும் இல்லை.

பதினொரு மணி சுமாருக்கு நீதிபதி வந்து சேர்ந்தார். கோர்ட்டு வாசலில் நின்ற போலீஸ்காரன் “ஸைலேன்ஸ்!” என்று காட்டுக் குரலில் கத்தினான். திடீரென்று கோர்ட்டில்

கசமுசப்பு அடங்கி, சவ அமைதி நிலவியது; கோர்ட்டில் கூடி யிருந்தவர்கள் எல்லோரும் திடுக்கிட்டு எழுந்து நின்றார்கள்.

விசாரணை ஆரம்பமாயிற்று.

கோர்ட்டுக் குமாஸ்தா குற்றவாளிகள் ஒவ்வொரு வரையும் கேள்வி கேட்டு விசாரித்தார்; அதைத் தொடர்ந்து நீதிபதியின் வாயிலிருந்து ஐந்து ரூபாய் பத்து ரூபாய் என்று அபராத விதிப்புக்கள் பிறந்து கொண்டேயிருந்தன.

சிறிது நேரத்தில் அவனும் கூண்டில் ஏறினான்.

குமாஸ்தா அவன் பெயர் வயது முதலிய விவரங்களை யெல்லாம் விசாரித்து நிருபித்தார். அவன் எல்லாவற்றுக் கும் தலையை ஆட்டினான். பிறகு குமாஸ்தா அவனை நோக்கிக் கேட்டார் :

"ஏனப்பா, நீ நடு ரோட்டில் நிர்வாணமாய்ப் படுத்துக் கிடந்தியா!"

அவன் 'ஆமாம்' என்ற பாவனையில் தலையை அசைத் தான்.

கோர்ட்டில் கலீரென்று ஒரு கணம் சிரிப்பொலி பொங்கியது, கூடியிருந்த சகல மக்களின் கண்களும் அவன் மீது பாய்ந்தன; அவனது இரு கண்களும் ஒரு கணம் ஜனத் திரளை அளந்து நோக்கின. அந்த ஜனத்திரளின் சிரிப் பொலியும் கூரிய கண்களும் அவனது உள்ளத்தில் ஆயிரம் தேள்களைக் கொண்டு கொட்டவிட்டதுபோல் சுருக்கென்று தைத்து வேதனையளித்தன. அவன் கூண்டுக்குள் குன்றிச் சாம்பினான்.

"ஸைலேன்ஸ்!" முன்னூற்றி மூன்றின் கர்ஜனைக் குரல் மீண்டும் கோர்ட்டில் அமைதியை நிலை நிறுத்தியது.

நீதிபதி அவனை ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்தார்; குனிந்து ஏதோ எழுதிவிட்டு, 'பத்து ரூபாய் அபராதம் அல்லது ஒரு வாரம் சிறைத் தண்டனை' என்று தீர்ப்பளித்

தார். பிறகு சாவதானமாக அவன் பக்கம் திரும்பி, கடுமை யான குரலில் கேட்டார்:

"நடுத் தெருவிலே நிர்வாணமாக கிடந்திருக்கியே. ஆணும் பெண்ணும் நடமாடும் இடத்திலே அப்படிக் கிடக் கிறதுக்கு உனக்கு வெட்கமில்லே? உனக்கு மானமில்லே? ரோஷமில்லே?"

அவன் உதடுகள் படபடவென்று துடித்து நெளிந்தன; கண்கள் நெருப்பைக் கக்கப் போவதுபோல் சிவந்து கனன்று கொதிப்பேறின; நடுநடுங்கும் கரங்கள் முறுகிப் பிசைந்தன; திடீரென்று மடையுடைத்துப் பொங்குவது போன்ற ஆவேசம் அவன் மூச்சில் குடிகொண்டு இரைந்தது; எரிமலை வெடித்துச் சிதறுவதுபோல், துடிதுடிக்கும் அவனது வாய்ப்பூட்டு உடைந்து சிதறி வார்த்தைகள் பறக்கத் தொடங்கின:

"யாரைப் பார்த்துக் கேட்கிறீர்கள். இந்தக் கேள் வியை? எனக்கா மானமில்லே? ஊராரின் மானத்தையெல் லாம் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட என்னைப் போன்ற நெசவாளிகளின் மானத்தைக் காக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டதா, உங்கள் சர்க்கார்? உழைத்துப் பாடு பட்ட எங்கள் கைகளை முறித்துவிட்டு, எங்கள் பிழைப்பிலே மண்ணடித்து, நாங்கள் பெண்டு பிள்ளைகளோடு புழுப்போல் துடித்துச் சாவதைப் பார்த்துக்கொண்டிருக்கிறதே, இந்த சர்க்கார்? யாருக்கு மானமில்லே? என் போன்ற உழைப் பாளிகளை அரை முழத் துணிக்கும் நாதியற்று அவமானப்பட விட்டு விட்டு, சுதந்திரம் சுதந்திரம் என்று வாய் கிழியப் பேசுகிறதே, இந்த ஆட்சி? யாருக்கு மானமில்லே? என்னைச் சந்தி சிரிக்க வைத்ததும் போதாதென்று, குற்றவாளியாக்கிக் கூண்டிலேற்றிச் சட்டத்தை நிலைநாட்ட மானஈனமின்றி முன் வருகிறதே இந்த சர்க்கார்! யாருக்கு மானமில்லே? யாருக்கு ரோஷமில்லே... யாருக்கு...?"

அவனை அதிக நேரம் பேச விடவில்லை, நீதிபதி. "ஷட் அப்!" என்ற வெடிக் குரல் அந்தத் தர்ம புருஷனின் கண்டத்திலிருந்து தாவிப் பிறந்தது.

மறுகணம் கோர்ட்டில் அசைவற்ற அமைதி.

நீதிபதி கீழே குனிந்து அவசர அவசரமாக எதையோ எழுதி விட்டுச் சொன்னார்:

"கோர்ட்டை அவமதித்த குற்றத்துக்காக, உனக்குக் கூடப் பதினைந்துநாள் சிறைவாசம் விதிக்கிறேன். இறங்கு கீழே!"

—1952

# கூண்டுக் கிளி

சறுக் சறுக்கென்று கேட்டுக் கொண்டிருந்த பாதக் குரடு களின் ஓசை நின்றது. அதைத் தொடர்ந்து பாராக்காரன் ஓங்கியடித்த பதினேரு மணி ஓசையும் கேட்டது. கப்பிக் கவிந்து கனத்துத் தொங்கிய இருளைப் பிளந்துவந்த அந்த மணியோசை காற்றேடு கலந்து மடிந்து மறைவது பயங்கர மாகத்தானிருந்தது.

மணிச் சத்தம் கேட்டதும் பிளாக்குக்கு வெளிப்பக்க முள்ள வராந்தா மூலையில் வாடை தாங்காது கூனிக் குறுகி உட்கார்ந்திருந்த வார்டர் விளக்கை எடுத்துக் கொண்டு ஒவ்வொரு ஸெல்லாகப் புள்ளி குத்தி வர எழுந்தான். இரும்புக் கிராதிக்குப் பக்கத்திலுள்ள சுவரில் மாட்டப்பட் டிருந்த புகை மண்டும் விளக்கின் சுடர் அமைதி இழந்து நெளிந்து கொடுத்தது.

மணியோசை காதில் விழுந்ததும் ஏற்கெனவே அரைத் தூக்கத்திலிருந்த நான் எழுந்து உட்கார்ந்தேன்.

ஸெல்லுக்குள்ளே கொசுக்களின் காதையடைக்கும் இரைச்சல். எழுந்திருந்து கதவின் பக்கம் வந்து அமர்ந்து முட்டைக் கட்டிக் கொண்டேன். தூக்கம் கலைந்துவிட்ட போதிலும் கண்ணின் கனம் இறங்க வில்லை. காயவைத்த புளியம் பசைபோல் கண்ணிமை கள் இறுகின. ஊதை வாடையும் கொசுக் கடியும் உடலை வருத்தின. வாடை தாங்காமல் கம்பளியை இழுத்துப் போர்த்திக் கொண்டேன். ஆனல், கம்பளியி

னுள்ள செள்ளுப் பூச்சிகளின் அரிப்பைத் தாங்க முடியா மல், கம்பளியையும் சுருட்டி மூலையில் எறிந்தேன். சொக்கி வரும் தூக்கத்தில் சிறைச் சுவரில் சாய்ந்து கொள்ளலாம் என்றால், அதில் புதிதாக அடிக்கப் பெற் றிருந்த கீலெண்ணெய் இன்னும் காய்ந்த பாடாய்க் காணோம். ஆதலால் முட்டைக் கட்டியவாறே, முகத் தைக் கால்களுக் கடியில் புதைத்துத் தூங்க முயன் றேன்.

சுவரிலிருந்த புகை மீண்டும் விளக்கிலிருந்து ஒரு ஒளித் துண்டம் சிறைக் கம்பிகளால் வகிரப்பட்டு ஸெல்லுக்குள் விழுந்தது. பிளாக்குக்கு வெளியே உள்ள வான வெளியில் தூறல் பிசு பிசுத்து அழுதது. கூரைச் சரிவிலிருந்து வடிந்து விழும் நீர் சொட்டுச் சொட்டாகப் பக்கத்து வாதாம் மரத்திலைகளில் விழு வது கூடக் கேட்டது. மழையின் சிணு சிணுப்பு; எங்கோவிட்டு விட்டுக் கடூரமாய்க் கத்திக் கொண்டிருக் கும் மடைத் தவளைகளின் முணுமுணுப்பு; ஸெல்லுக் குள்ளே ரீங்காரிக்கும் கொசு இரைச்சல்; பக்கத்து அறை களிலே தூங்கும் கைதிகளின் பயங்கரமான குரட் டைச் சப்தம் — எல்லாம் எனக்குப் பழகிப் போன பாவத்தால் பயத்தை மூட்டாவிட்டாலும் எரிச்சலைக் கிளறி விட்டன.

எழுந்து சென்ற வார்டர் ஒவ்வொரு ஸெல்லாகப் புள்ளி குத்தி விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தான்.

"வார்டரையா, வத்திப் பெட்டி இருக்குதா?" என்ற குரல் விளக்கொளியோடு மிதந்து வந்தது. வார்டர் நின்றான்.

"யாரது? சிந்தாமணித் தேவனா?" என்று குரல் கொடுத்தான் வார்டர். ஆமோதிப்பு வந்தது. "டே, பீடி இருக்குதா?" என்று கைதியிடம் கேட்டான்.

"ஒரு கட்டை இருக்குது. எட்டு வாடரு கொணந்திர தாகச் சொன்னாரு. அவர்தான் சாயங்காலம் பைலுக்

குக் கூட வரலியே" என்று அங்கலாய்த்துக் கொண்டான் கைதி.

"அவரு எங்கே போவாரு? மனெ நேரமில்லே. சாராயக் கடை கூப்பிட்டிருக்கும்...ம்—எங்கிட்ட வத்திப்பெட்டி இல்லே. இந்தா—விளக்கிலே பத்தவச்சிக்க. டேய், அணைச்சிப் போடாதே, பிறவு இருட்டிலே கிடந்து மாளமுடியாது" என்று விளக்கை அறைப்பக்கம் வைத்துவிட்டு நின்றான் வார்டர்.

அறைக்குள்ளிருந்த கைதி விளக்கைத் தூக்கிப் பிடித்துத் தன் பீடியைப் பற்றவைத்துக் கொண்டான். விளக்கை எடுத்துக்கொண்டு வார்டர் திரும்பிவரும்போது "என்ன வார்டர்? இரண்டாம் பாரா முடிஞ்சிட்டுதா?" என்று கேட்டான்.

"இன்னம் நாலு புள்ளி குத்தணுமே. பதினொரு மணி தானே ஆச்சி. மனெ வேறே சிணுங்கிக்கிட்டிருக்கு" என்று சலித்துக்கொண்டான் வார்டர். பிறகு தன் பையைத் துழாவி பீடி ஒன்றை எடுத்து விளக்கில் பற்ற வைத்துக் கொண்டான். பிறகு "என்ன சார். நாளேக்கி நீங்க வீட்டுக்குப் போயிருவிய, ஜெயிலரையா நேரத்தோடேயே வந்துட்டாருன்னா, சீக்கிரமே அனுப்பிச்சிருவாக" என்றான்.

நான் வெறுமனே தலையை ஆட்டினேன்.

"வந்ததுக்கு இப்ப நீங்க ரொம்ப இளேச்சித்தான் போனிய சார்" என்று பரிதாபத்தோடு சொன்னான் வார்டர்.

"அப்படித் தெரியலே" என்று பேச்சைச் சுருக்கினேன். வீணுகப் பேச்சை வளர்த்துக் கரும்பு போல் வரும் தூக்கத்தைக் கெடுத்துக் குரங்காயிருக்க விரும்பவில்லே.

வார்டரும் விளக்கை எடுத்துக்கொண்டு வராந்தா மூலேக்குச் சென்றான்.

விடிந்தால் விடுதலை

நான் இந்தச் சிறைக்குள் காலடி எடுத்து வைத்து ஒரு வருட காலமாகிறது. திருடியோ, கன்னம் வைத்தோ நான் ஜெயிலுக்கு வரவில்லை. நான் செய்த குற்றத்தின் பெயர்—தேச பக்தி. இந்தச் சிறைவாசமும் எனக்குப் புதிதல்ல. ஏற்கனவே முன்னொருதடவை இரண்டு வருடக் கடுங்காவல் தண்டனை பெற்று, சிறைவாசம் அனுபவித்தேன். நாடு விடுதலை பெறவேண்டும் என்ற ஆர்வம் துன்பங்களைப் பொருட்படுத்தவில்லை; பெண்டு பிள்ளைகளை நினைக்கச் செய்யவில்லை. இன்றோ அவர்கள்—என் மனைவியும் மக்களும்—சொத்துச் சுகங்களை விற்றுத் தின்றுவிட்டு, தன் பலத்தை நம்பி அரைவயிறும் குறை வயிறுமாய்க் காலம் கழிக்கிறார்கள். நேற்றுக்கூட, அவளிடமிருந்து பஞ்சப் பாட்டுப் பாடிக் கடிதம் வந்தது. நான் விடுதலை யடைந்து வரப்போவதை எண்ணி மகிழ்ச்சியும் தெரிவித்திருந்தாள். என்னத்தைத் தெரிவித்து என்ன பண்ண? 'காலிலே ஒரு கட்டையைக் கட்டிப்போட்டால் பையன் சீராகி விடுவான்' என்றுதான் எனக்கு அவள் கையைப் பிடித்துத் தந்தார்கள். என்றால் நாட்டுக்காக உழைப்பதை, அதனால் சிறைவாசம் தடியடி பெறுவதைத் தடுக்க முடியவில்லை. என்போன்ற தொண்டர்கள் எல்லாம் சேவை செய்தே மடிய வேண்டியவர்கள் தானா...?

போன தடவை என்னுடன் சிறைக்கு வந்தவர்கள் எல்லாம் தியாகிகள்; இளைஞர்கள். அரசியலைத் தெரிந்தோ தெரியாமலோ, நாட்டுக்கு, நாட்டு விடுதலைக்குச் சிறை செல்லவேண்டும் என்ற ஒரே குருட்டு ஆர்வத்துடன் உழைத்து உள்ளே வந்தவர்கள். குறிக்கோளைப் பற்றித் தெளிவு பெற்ற ஞானமில்லாவிட்டாலும், கண்முன் தெரியும் பாதையில் செல்லத் தயங்காத வீரர்கள். இந்தத் தடவை ஜெயிலுக்கு வந்துள்ளவர்கள் அந்தக் "குருட்டு" வீரர்கள் அல்ல. அறிவும் அனுபவமும் பெற்று லட்சியப் பாதையின் தடத்தைத் தடவி அறிந்தவர்கள். குறிக்கோளை

நோக்கிச்செல்லும் பாதையில் இடை வழிகளிலுள்ள சத்திரஞ் சாவடிகளிலேயே தங்கிவிடக் கூடியவர்களும் இருந்தார்கள்; பதவி வகித்தவர்களும் வந்திருந்தார்கள். இவர்களிடம் பழைய வெறி இல்லை; நிதானம் இருந்தது. ஒன்றிரண்டு பேர்களிடம் சுயநலத்தால் விளைந்த கயமையும் கூட இருந்தது.

இவர்களிடமெல்லாம் பழகிப் பழகி எனக்குக்கூட என்னுடைய லட்சிய வேட்கையின் காங்கை குறைந்தது. பிரசினை எழுந்தது. "நாளைக்கு இவர்களை யெல்லாம் விட்டு நான் மட்டும் பிரிந்து செல்கிறேன். ஆனால் வெளியே சென்ற பிறகு?—" இந்தப் பிரசினை என்னை அலட்டியது. அதன் மர்மத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. எல்லாம் வெளியில் சென்று தீர்மானிக்க வேண்டும் என்று தற்காலிகமாக முடிவு செய்து கொண்டேன்.

இந்தத் தடவை சிறைக்குள் வரும்போது எனக்குப் பழைய உத்ஸாகம் இல்லை. முன்னைப்போல் சிறைக் கம்பிகள் கைநீட்டி வரவேற்றதாகத் தெரியவில்லை. சிரிப்பதாகத் தோன்றிற்று. வெறும் சிரிப்பல்ல; ஏளனச்சிரிப்பு.

ஜெயில் சூப்பிரண்டெண்ட் உத்தரவு கொடுத்து நான் சிறைக்குள் வரும்போது மணி நாலடித்து விட்டது. சிறை வார்டர் என்னை உள்ளே அழைத்துச் சென்றான்.

சிறைக்குள் தலைவர்களும், ஊழியர்களும் அலுமினியத் தாளங்களை வைத்துக்கொண்டு பருக்கை கொரித்துக் கொண்டிருந்தார்கள். உள்ளே இருந்த தேச பக்தர்களைக் கண்டதும் என் மனதில் மகிழ்ச்சி துள்ளாடியது. எல்லோரும் என்னை மலர்ந்த முகத்தோடு வரவேற்றனர். அந்த ஒரு தலைவர் மட்டும் என்னை நோக்கிச் சிரித்தார். சிரிப்பிலே விஷம் கலந்திருந்தது. எனக்கு என்னவோ போலிருந்தது. அவருடைய போக்கை என்னால் தாங்க முடியவில்லை. என்னை யெல்லாம் ஊக்குவிக்க வேண்டிய தலைவனிடமிருந்தா நான் ஏதோ செய்யத் தகாததைச் செய்து விட்டதை ஏளனம் செய்வது போல், சிரிப்புப் பிறக்க வேண்டும்?

வயிற்றில் பசி இல்லை. பிரயாண அலுப்பில் வயிறு மந்தித்துப் போயிருந்தது. அதனால் பக்கத்து வாதாம் மரத் தடியில் அமர்ந்து மற்றவர்கள் உணவருந்துவதைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

கைதிகள் சாப்பிடும் நேரம் இந்தக் காக்கை குருவி களுக்கு எப்படித் தெரியுமோ? மதில்சுவரைத் தாண்டிப் பறந்து வந்து வாதாம் மரத்தடியில் அமர்ந்து கொண்டன.

நான் தலை நிமிர்ந்து பார்த்தேன். என் மனசில் என்னை யும் அறியாமல் 'விட்டு விடுதலையாகி நிற்பாய்' என்ற பாடல் ஞாபகத்துக்கு வந்தது. என்னால் பாடத்தானே முடியும்? பறக்க முடியுமா?

மரத்திலிருந்த காக்கைகள் கீழிறங்கி இரை பொறுக்கி விட்டு, மதிலைத் தாவிப் பறந்து வானவெளியில் நீந்திச் சென்றன.

நான் யோசித்தேன்: "இந்தச் சிறைக்குள் பறந்து வந்த பறவைகள் அவ்வளவு லகுவில் இதைக் கடந்து போய் விடுகின்றன. ஆனால் தேச பக்தர்களாகிய நாமோ காலில் கட்டிய அடிமைத் தளையின் கனத்தால், பூமிப் புழுதியில் தான் புரள்கிறோம். இந்தச் சிறையி லிருந்து விடுதலை பெற்றால்கூட நமக்குச் சுகமில்லை. வெளியுலகம் எவ்வளவே : விசாலமானதாயிருக்கலாம்; இமயம் முதல் குமரிவரை அகண்டு பரந்ததாயிருக்கலாம். இருப்பினும் சிறை சிறைதானே!"

என்னுடைய விடுதலை விசாரத்தைத் தேசபக்தர்கள் கலைத்து விட்டார்கள். "சரி, ரயிலில் வந்த அலுப்பு இருக்கும். இங்கேதான் இருக்கப் போகிறாரே" என்று ஒருவர் இடை மறித்துக் கூற, எங்கள் சந்திப்புச் சிதறியது.

ஹெட்வார்டர் என்னை நாலாம் நம்பர் செல்லுக்கு அழைத்துச் சென்றான். செல்லுக்குள் விட்டுக் கதவைப்

பூட்டியதும் எனக்கு விலங்கிட்ட உணர்ச்சி ஏற்பட்டது; உட்கார்ந்தேன்.

ஜெயிலின் பர பரப்பு ஒழிந்து அமைதி குடி கொண்டது. மாலை வெயில் ஸெல்லுக்குள்ளிருந்த திட்டிச் சன்னல் வழியாகப் பாய்ந்து விழுந்தது. சாயந்திரம் ஆறுமணியடிக்கும் ஓசையும் கேட்டது.

மறுநாள் முதல் நான் கிலெண்ணெய் நாற்றம், அளிக் கதவின் முனகல், பைலில் உட்காருவது, கஞ்சி குடிப்பது, மதியமும், மாலையும் மண்கலந்த சாப்பாடு, முள்ளங்கி, பூசணி, தடியங்காய், சுரைக்காய் என்ற சதுர்விதக் காய்களை விட்டு வேறு கறியற்ற குழம்பு, உளுத்துக் காம்பிப்போன பழம் பருப்பின் நெடி, மோர் என்ற 'தத்துவத்தை'யே மறைத்து விட்ட குழாய்த் தண்ணீர், காணத் துவையல், புழுக்கள் சினை படரும் ஊறுகாய்—இத்தனை சம்பிரமங்களுடன் சாப்பாடு, 20X18 ஆக 360 சதுர அடிப் பரப்புள்ள சிறைத்தளத்தின் சீதம், மதியம் வேப்பமரத்தடியில் நடைபெறும் அரசியல் வகுப்பு—இத்தியாதி நிகழ்ச்சி நிரலை அனுபவிக்க ஆரம்பித்து அங்குள்ள பலரில் ஒருவனாகி விட்டேன்.

ஆனால் சிறைவாசத்தின் கசப்பைவிட அங்கிருந்த அந்தத் தலைவர்—என்னைப் பார்த்துச் சிரித்தாரே அந்தத் தலைவர்—மனசில் ஊட்டிய கசப்பைத்தான் என்னால் தாங்க முடியவில்லை. அரசியலோடு அரசியலாய் அவர் அந்தக் கருத்தை இடைச் செருகல் பண்ணினார். 'ஜெயிலுக்கு வந்து என்னத்தைக் கண்டோம்? நாம் ஜெயிலுக்கு வர வர வெள்ளையனுக்குக் கொண்டாட்டந்தான். நமக்குச் சோறு போட வேண்டும் என்ற கவலைகூடக் கிடையாது. எலியைப் பிடித்துப் பத்தயத்துக்குள் அடைப்பது மாதிரி அடைத்து விடுகிறான். இனிமேலும் நாம் அவனோடு மல்லாடிக் கொண்டிராமல் சமரசப்பான்மையோடு அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டியதுதான். நாடு ஆபத்துக்குள் சிக்கியுள்ள இந்த வேளையில் நாம் கைகட்டி இருப்பது சரியல்ல. ஆகவே விரை

வில் நாம் விடுதலை பெற்று நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ள அதிகாரம் பெறவேண்டும்.'

ஆனல் இந்த உபதேசத்திற்குப் பின்னல், என் கண் களுக்குச் சட்டசபை நாற்காலிகள்தான் காலியாகத் தெரிந்தன.

'இப்படிக் கருதும் தலைவர்கள் உள்ளேயே வந்திருக்க வேண்டாமே' என்று நான் கருதினேன். "தேச பக்தர்களின் சதையும், எலும்பும், ரத்தமும், இந்தியத்தாயின் சுதந்திரக் கோயிலை எழுப்பத்தானே ஒழிய இப்படிப்பட்ட தலைவர் களின் வீட்டு முற்றத்துக்குத் தளவரிசை போடுவதற்கல்ல" என்று சிந்தித்தேன். இங்குள்ள வீரர்கள் பலரின் கனவுகள் சட்டசபை நாற்காலிகளோடு நின்றுவிடக் கூடாதே என்ற பயமும் மனசில் முளைவிட்டது.

இத்தாலியப் போராட்ட வீரன் கரிபால்டி எப்போதோ சொன்னனும்: "இளைஞர்களே! என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள். வந்தால் சிறைத் தண்டனை, ஜென்ம தண்டனை, தூக்குமேடை, அடிதடி எல்லாம் கிடைக்கும்; கடைசியில் உங்கள் நாட்டுக்கு சுதந்தரம் கிடைக்கும்!"

இந்தப் பொன்மொழிகளைத் தெரிந்தோ தெரியாமலோ காதில் வாங்கி, போர்க்களம் சென்ற புனித பரம்பரையில் வந்தவனுகவே நானும் விளங்க வேண்டும் என்பது என் ஆவல்; ஆசை, ஆனல், இந்தத் தலைவரின் யோசனையைக் கேட்டால் இனி ஜெயிலையே மறந்துவிட வேண்டியது தானே?

அன்றொரு நாள் வெட்டுக் கேஸில் அகப்பட்ட சிந்தாமணித் தேவனுக்குத் தீர்ப்பளித்து விட்டார்கள். கொலை செய்ய முயன்றதாக ஏழு வருஷக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டு, மீண்டும் ரிமாண்டுக் கொட்ட டிக்கு வந்து சேர்ந்தான். ஆனல் வரும்போது அவன் முகத்தில் கொஞ்சங்கூட வருத்தமில்லை. அவனைப் பார்த்து

நான், "என்னப்பா, உன் தீர்ப்பு என்ன ஆச்சி?" என்று கேட்டேன்.

அந்தக் கேள்விக்கு அவன் சொன்ன பதில் என்னைத் திடுக்கிட வைத்தது.

"என்ன சாமி. அந்தப் படுவாப்பயலைத் தீர்த்துப் புடணும்னுதான் நெனைச்சேன். வெட்டு என்னவோ தவறிப் பூடிச்சி. இங்கே உள்ளே வந்து பதினாலு கம்பியையும் எண்ணி யாச்சி. ஏழு வருஷம் போட்டுட்டாங்க. ஆனா இந்த ஏழு வருஷத்தையும் ஏழு நாளாத் தவம் கிடந்திட்டு, பழையபடி அந்தப் பய மவனை வேலையைச் சாய்க்காட்டா நான் கொண் டயங் கோட்டையனா சாமி? இதனாலே கழுத்துக்கே கயிறு வந்தாலும் சரிதான்."

சிந்தாமணித் தேவனின் இந்தப் பதிலைக் கேட்டதும், அன்றைக்கு என் மனசிலே 'கொலைகாரப் பாவி' என்று திட்டத்தான் தோன்றியது. ஆனால் இன்றைக்கோ—விடுதலை யடைந்து சென்று நாளை என்ன பண்ணு வது என்ற யோசனை இல்லாமல் தவிக்கும் இன்று இரவிலோ—அவனுடைய வர்மப் பேச்சில் அர்த்த புஷ்டி இருப்பதாகத் தோன்றியது. தேச சுதந்திரத்தைக் குறிக் கோளாகக் கொண்ட தேசிய வாதிகள் பலருடைய கனவுகள் பதவியோடேயே நின்று விடுகின்றன. ஆனால் இந்தப் பாமரனின் குறிக்கோள் எதிரியின் உயிரை வாங்குவதுதான். ஏழு வருஷம் போட்டாலும் நெஞ்சம் கலங்காமல் சிறைக்குள்ளே எப்போதோ வரப்போகும் சந்தர்ப்பத்தை எதிர் நோக்கித் தவம் கிடக்கிறானும், தவம்.

"கோழைத் தனத்தைவிட பலாத்காரமே சிறந்தது" என்ற மகாத்மா காந்தியடிகள் கூற்றும் எனக்கு அப்போது தான் புரிந்தது.

அப்படியானால் நான் நாளை இங்கிருந்து சென்றவுடன் மீண்டும் இங்கேயே வரவா ?......

" என்ன சார், இன்னம் தூங்காமலா இருக்கிய?" என்று கேட்டுக்கொண்டே அளிப்பக்கம் வந்தான் வார்டர். மணியும் இரண்டு அடித்தது.

" இது என்ன கடேசிப் பாராவா ?" என்றேன்.

" இல்லே ஸார், இப்ப அஞ்சாம் பாரா. படுத்துக்கிங்க. இன்னம் மூணு நாளி நேரந்தானே—காலையிலே பைலுக்கு எழுந்திரிக்கணும் பாருங்க " என்று கூறிவிட்டுப் புள்ளிகுத்தப் போனான் வார்டர்.

வெளியில் தூறல் நின்றுவிட்டது. மழை வாடை மட்டும் தாங்க முடியவில்லை. மார்கழி மாசக் குளிருக்கு இப்போதே அடிபோட ஆரம்பித்திருந்தது. ஸெல்லுக் குள்ளே உள்ள தொண்டு வழியாய் வானைப் பார்த்தேன். வானத்தில் நட்சத்திரங்கள் பிரகாசமாகச் சுடர் விட்டன : எனினும் இருளின் பயங்கரம் மாயவில்லை. தவளைகளின் முணமுணப்பும், கொசுக்களின் இரைச்சலும் நிற்கவில்லை.

முட்டைக் கட்டி உட்கார்ந்திருந்த நான் யோக நிலை கலைந்து எழுந்திருந்தேன். கிட்டி வந்த தூக்கம் கண்ணில் ஈயக் கனத்தை ஏற்றியது. வேறு வழியின்றி அப்படியே முடங்கிச் சுருண்டு தூங்க ஆரம்பித்தேன். மறு நிமிஷமே நினைவு மங்கியது.

இடையில் எந்த மணியோசையும் காதில் விழவில்லை. அத்தனை மயக்கம்.

"பைல் ! பைல்!" என்று கடைசிப் பாரா வார்டர் கத்திக் கொண்டு வந்தான். மணிச் சப்தமெல்லாம் காதில் தாக்கிக் கைதிகளின் தூக்கத்தைக் கலைக்கா விட்டாலும், காலையில் வார்டரின் 'பைல்' என்னும் கிங்கரக்குரல் அவர்களை யெல்லாம் எப்படியோ எழுப்பி

விடும். உள் நெஞ்சம் அந்த ஒரு சொல்லுக்கு மட்டும் எந்தத் தூக்கத்திலும் காதைத் தீட்டி வைத்துக் கொண்டிருக்கும்.

மணி ஆறு அடித்தது. ஸெல்லுக்குள்ளே ஒரே பரபரப்பு, 'ஒரு நாள் கழிந்தது' என்றே திருப்தியோடு கைதிகள் எழுந்திருந்தனர். நானும் 'ஒரு மட்டும் கழிந்தது' என்ற தெம்போடு எழுந்து உட்கார்ந்தேன்.

ஆட்டுக்கிடையை எண்ணுவதுபோல் வார்டர் எங்களை எண்ணி, நபர் எண்ணிக்கையைச் சரிபார்த்து விட்டுப் போனான்.

எழுந்தவுடன் மனசில் ஒரு நிம்மதி. 'இன்று மாலை சாப்பாடு கிளப்பில்; ஜெயிலிலல்ல' என்ற நினைப்பில் ஒரு அர்த்தமற்ற எக்களிப்பு. நாட்டுக்காக நரகவாசம் செய்து புனிதமடைந்ததாக, மீண்டும் தியாகத்துக்குப் புது வலிவு பெற்றதாக, ஒரு பெருமிதமும் கிளர்ந்தது.

காலைக் கஞ்சி முடிந்ததும் எல்லோரிடமும் சொல்லிக் கொண்டேன். அந்தத் தலைவரிடமும் சொன்னேன். அவர் தமது கொள்கையை அந்த வேளையிலும் 'இக்கன்னு' வைத்துப் பேசி, "பழையபடியும் இங்கே வராதே" என்று சொல்லாத குறையாய் உபதேசம் செய்தார்.

நான் வெறுமன தலையை அசைத்துவிட்டு ஸெல்லுக்குத் திரும்பினேன். ஒரு மணி நேரத்துக்குள் ஹெட் வார்டர் அங்கு வந்து, "வாங்க சாமி, ஜெயிலரு கூட்டியாரச் சொன்னாரு" என்று அழைத்தான். கதவைத் திறந்தான். உள்ளே யிருந்த படுக்கை, குவளை முதலியவற்றை எடுத்துக் கொண்டு வெளியே வந்தேன். வார்டர் கதவை இழுத்து மூடினான். கதவின் கிரீச்சிட்ட சப்தம் 'போய்விட்டு வா' என்று சம்பிரதாய வக்கணை குறையாமல் சொல்வது போலிருந்தது.

—என்ன ? போய்விட்டு வரவா?

"வாங்க சார்—விட்டுட்டுப் போறதுக்கு மனசில்லையா ?" என்று கேட்டான் வார்டர்.

சிறைக் கதவுக்குப் பின்னால் கம்பியைப் பிடித்துக் கொண்டு நின்ற சிந்தாமணித் தேவன் கேட்டான் : " என்ன சாமி போறீங்களா?"

அப்படியானால் போகக்கூடாதா! சிந்தாமணித் தேவனைப் போல் எனது லட்சியம் நிறைவேறும் வரை இங்கேயே வந்து கொண்டிருக்க வேண்டுமா ? என்போன்ற ஊழியர்கள் மீண்டும் மீண்டும் சிறைக்குள்ளே வந்து சேர வேண்டியது தான். சிறைதான் எங்கள் அன்னை பாரதத் தாயின் மடி !...

நான் ஜெயிலரிடமிருந்து எனது சாமான்களைப் பெற்றுக் கொண்டபோது என் மனசில் இந்த மாதிரியான கர்ப்போட்டங்கள் தான் அசைந்தன.

ஆம். மீண்டும் வரவேண்டியதுதான் ! இன்று நான் உபதேசம் பெற்றது தேச பக்தரான தலைவரிடமிருந்து அல்ல ; கொலைகாரனான சிந்தாமணித் தேவனிடமிருந்து தான் !

என்னுடைய எண்ணத்தை ஊர்ஜிதம் செய்வது போல், ஜெயிலின் எட்டு மணி ஓசையலைகள் தேவநாதமாக ஆமோதித்து ஒலித்தன.

—1945.

# அபாய அறிவிப்பு

அன்று அவசரமாகத் திருநெல்வேலி செல்லவேண்டியிருந்தது.

சென்னையிலிருந்து திருநெல்வேலிக்கு நானூறு மைல்; ரயிலில் சென்றால், அதாவது எக்ஸ்பிரஸில் சென்றால், சரியாகப் பதினெட்டு மணி நேரப் பயணம். பதினெட்டு மணி நேர ரயில் பயணம் என்பது உடம்பைப் பிடிக்கக் கூடிய விஷயம்தான் என்பதைப் பதினெட்டு மணி நேரம் பயணம் செய்தவர்கள்தான் உணர முடியும். பிரயாணிகளின் ஏகோபித்த ஐக்கிய முன்னணியாகத் திரண்டு, புளிச் சிப்பம் போல் அடைந்து கிடக்கும் மூன்றாம் வகுப்பு வண்டியில், பதினெட்டு மணி நேரம் காலைக் கையை அசைக்காமல், குறுக்கைச் சாய்க்காமல் செல்லும் பிரயாணக் கஷ்டத்தை வேத காலத்து ரிஷி புங்கவர்களின் ஒற்றைக் கால் தவங்கள் கூட உணர முடியாது. அத்தனை சிரமம்.

எனவே கொஞ்சம் வழக்கம்போலவே திடுக்கிட்டேன். ''பதினெட்டு மணி நேரப் பயணமானால் மூன்றாம் வகுப்பில் போவானேன்? இரண்டாம் வகுப்பில் போனால் என்ன?'' என்று செயலுள்ள புண்ணியாத்மாக்களுக்கு வாய் கூசாமல் கேட்கத் தோன்றும். தமிழ்நாட்டில் எழுத்தாளனாகப் பிறந்துவிட்டால் மூன்றாம் வகுப்புப் பெட்டிக்குப் பதிலாக, நாலாம் வகுப்புப் பெட்டி இருந்தால்கூட நல்லதுதான். எனவே எப்படியடா போய்ச் சேர்வது என்று சிறிது மலைத்தேன்.

நல்ல வேளையாக என் நண்பர் ஒருவர் "மூன்றும் வகுப்பு வண்டிகளில்கூட இடம் ரிஸெர்வ் செய்கிறார்கள், அதில் போங்களேன்" என்றார்.

எனக்கு ஆச்சரியமாயிருந்தது. "மூன்றும் வகுப்புப் பிரயாணிகளின் வசதிகளைக்கூடச் சர்க்கார் கவனிக்க ஆரம்பித்துவிட்டதா ?" என்றேன்.

'என்ன ஸார், இது நம்ம சர்க்காராக்கும் !" என்று அடித்துப் பேசினார் நண்பர்.

எனக்கு அப்போது சர்க்கார்மீது நமக்குள்ள உரிமையைப் பற்றி யெல்லாம் கவலையில்லை. நண்பர் சொன்னபடி இடம் கிடைத்தால் சரிதான் என்று எண்ணி, எழும்பூர் சென்று திருநெல்வேலிக்கு ஒரு டிக்கட் வாங்கினேன் ; ரிசர்வ் பண்ணவும் நாலணுக் கொடுத்துப் பதிவு செய்து கொண்டேன்.

'செங்கோட்டை வண்டி, பெட்டி 4. ஸீட் 16'

'பரவாயில்லையே—நாம் எத்தனை நாழிகை கழித்து வந்தாலும் அந்தப் பதினாறும் நம்பர் ஸீட் நமக்கென்று காலியாக இருக்கும். அதில் யாரும் உட்காரமாட்டார்கள்' என்று நினைத்துக் கொண்டு வீடு திரும்பினேன்.

சாயந்திரம் நான் ஸ்டேஷனுக்குக் கிளம்பிப் போய்ப் பிளாட்பாரத்தில் காலடி வைத்தபோது மணி ஏழரை. இன்னும் பத்து நிமிஷத்தில் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் கிளம்பிவிடும். பெட்டி 4. ஸிட் 16ஐத் தேடித் திரிந்தேன். ஒருமட்டும் கண்டுபிடித்து வண்டிக்குள் ஏறினேன்; ஆனால் அந்த இடத்தில் வேறொருவர் உட்கார்ந்திருந்தார்.

" ஸார், இது பதினாறுதானே !"

"பதினாறாவது, கருமாதியாவது ? நான் மதுரைக்குப் போகிறேன்."

" இது ரிஸெர்வ் கம்பார்ட்மெண்ட், ஸார்!"

" அது சரி. இது மதுரைக்குப் போறதுதானே !"

" ஆமாம்."

"அப்போ, இதிலேயே போறேன்."

எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை.

ஆளைப் பார்த்தால் கொஞ்சம் வம்புதும்பு ஆசாமியாகத் தோன்றியது. சரி, இவரை இந்த இடத்தை விட்டுக் காலி செய்வது கஷ்டம்தான் என்று கருதி, "ஸார், நீங்கள் கொஞ்சம் இப்படித் தள்ளி இருங்கள். நான் வெற்றிலை போடுகிறவன், எச்சில் துப்பவேணும் என்றேன். தம்மை இறங்கிப் போகச் சொல்லாதவரை நல்லதுதான் என்று கருதியவர்போல அவர் விலகி அமர்ந்துகொண்டார். நான் நிம்மதியாக அந்த இடத்தில் அமர்ந்து வெற்றிலைப் பெட்டியை எடுத்தேன்.

"பேப்பர், பேப்பர்"

சத்தம் கேட்டதும் நான் ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டி ஒரு பத்திரிகை வாங்கினேன். பத்திரிகை படிப்பதைப் பொறுத்தவரை நாகரிகமக்கள் அனைவரும்—நான் உட்பட—யாவரும் சாக பக்ஷிணிகளான கால்நடை ஜாதிதான் என்பது என் அபிப்பிராயம். அவசர அவசரமாகப் புல்லைத் தின்றுவிட்டு, பின்னால் சாவதானமாக எப்படி மாடு அசை போடுகிறதோ, அது போலவே பத்திரிகையை வாங்கியவுடன் முதலிலிருந்து கடைசிவரை தலைப்புக்களை அவசர அவசரமாகப் பார்த்து விட்டுப் பின்னால் சாவதானமாகப் படிக்க முனைவதுதான் நாகரிக யுகத்தின் நடைமுறை தர்மம்.

கொரியாவில் அமெரிக்கர் தோல்வி—வனமகோத்சவ வைபவம்—பட்டினியினால் குழந்தையை விற்றாள்!—நவீன நல்லதங்காள்!—'ஆத்ம அபிவிருத்தியே உண்மை விடுதலை' மந்திரி பிரசங்கம்—சட்டசபை தமாஷ்—ருஷ்யாவில் அணுக்குண்டு?...

"அட, சரிதாம்ப்பா. நிறுத்துன்னா?"

நான் பத்திரிகையிலிருந்து கண்ணை உள்ளே திருப்பினேன்.

அந்த 'வம்பு தும்பு ஆசாமியிடம்' இன்னொரு நபர் வந்து தும்பு பண்ணிக் கொண்டிருந்தார். அது அவர் இடமாம்! ஒரு மட்டும் அந்த நபரைக் கிளப்பிக் கீழே இறக்கி விட்டு அந்த இடத்தில் துண்டை மடித்துப் போட்டு உட்கார்ந்த வுடன்தான் அவருக்கு வெற்றிக்களி தாண்டவமாடத் தொடங்கியது.

"டைம் என்ன ஸார்?" என்று பெருமிதத்துடன் கேட்டார்.

"ஆகிவிட்டது."

"பாருங்கள் ஸார். நம்ம நாலணுக் கொடுத்து ரிசர்வ் பண்ணிக்கொண்டு வாரோம். இங்கே என்னடா என்றால் இப்படித் தகராறு. நாலணு பெரிசில்லே ஸார். ஆனு, அதுக்காக ரிஸர்வேசன்கிறது சும்மாவா இருக்கு..."

அவர் பிரசங்கத்தைக் கேட்க எனக்குப் பொறுமை இல்லை. எனவே ஏதோ திடீரென்று யோசனை வந்தது போல், முகட்டைப் பார்த்தேன். பார்த்தவுடன் என் கண்கள் அந்தப் பலகையில்தான் விழுந்தன.

**அபாய அறிவிப்பு.........**

**வண்டியை நிறுத்தக் கைப்பிடியை இழு. அகாரணமாய் உபயோகிப்பவர்களுக்கு அபராதம் ரூ. 50.**

அந்தப் பலகையில் புதிதாக ஏதோ இருப்பதாகப் பார்த்தேன். ஆமாம். இப்போது அந்த 'றகரம்' போய் விட்டது. 'அகாறண'மும் 'அபறுத'மும் மறைந்து விட்டன. ரயில்வேக்காரர்கள் செய்துள்ள சீர்திருத்தத்தில் இது வரவேற்க வேண்டிய சீர்திருத்தம்தான் என்று மனசுக்குள் பாராட்டிக் கொண்டேன். பக்கத்திலிருந்த மனிதர் பேச்சை நிறுத்தி விட்டார் என்று தெரிந்ததும், மீண்டும் தலையைக் குனிந்து பத்திரிகையைப் பார்த்தேன்.

ரயில் அப்போது எழும்பூருக்கும் தாம்பரத்துக்கும் இடையில் ஓடிக் கொண்டிருந்தது...

வெளியில் ஒரே இருட்டு. வானத்தில் பொட்டுப் பொட்டாக நட்சத்திரங்கள். தூரத்தில் கீழ்த்திசை அடி வானத்தில் வட்ட நிலா மேலேற முனைந்து நின்றது. ஒரே செக்கர் வெள்ளம். பச்சை மரங்களின் கரிய பின்னணியில் நிலவைப் பார்க்கவே கோலாகலமாயிருந்தது. அந்தக் கோலாகலத்தை நன்ருக நின்று பார்த்துத்தான் அனுபவிக்க வேண்டும்; முப்பது மைல் வேகத்திலோடும் ரயிலில் இருந்து கொண்டு அனுபவிக்க முடியாது.

இதைப் பார்த்தவுடன் எனக்கு அபாய அறிவிப்பைப் பற்றி ஞாபகம் வந்தது. யாரோ ஒரு எழுத்தாளன் சார்லி சாப்ளினுடன் பிரயாணம் செய்தபோது, இந்த மாதிரிக் காட்சியைக் கண்டு ரசித்தானும். இதை நின்று பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்று பரிதபித்தானும். உடனே சாப்ளின் சங்கிலியை இழுத்து ரயிலை நிறுத்தி 'நன்ருக அனுபவியும்' என்று சொல்லி அபராதத் தொகையைக் கட்டினுராம்.

ஆனல், இப்படி அகாரணமாய் உபயோகித்து நான் அபராதம் கட்டத் தயாராகவும் இல்லை; ரயிலில் செல்லும் அத்தனை பேரையும் முட்டாளாக்கும் யோசனையும் எனக்குக் கிடையாது. எனவே கண்ணை மூடிக்கொண்டு கோவையற்ற சிந்தனைகளோடு மனசைத் திரியவிட்டேன்.

வண்டி தாம்பரத்தில் நின்றது.

வண்டி நின்றதுதான் தாமதம். ஒரு ஆசாமி மிகவும் அவசர அவசரமாக எங்கள் வண்டியில் ஏறினுர். உடனே என் பக்கத்திலிருந்த ஆசாமி விடுவிடென்று எழுந்து சென்று, "இறங்குமய்யா, இது ரிஸர்வ் வண்டி" என்ருர்.

"அது எனக்குத் தெரியும். வழியை விடு" என்ருர் அவர்.

"சொன்னுத் தெரியலே?"

"அட, சரித்தான். நான் என்ன உம் மடியிலேயா உக்காரப் போறேன். நான் பாட்டுக்கு நின்னுக்கினு வாரேன். உமக்கென்ன?"

கடைசியில் அந்தப் புதிய ஆசாமிதான் வெற்றி பெற்ருர். அவர் உள்ளே வந்ததும் வண்டி கிளம்பி விட்டது. அதன் பின் ஏறியவரை எப்படி இறங்கச் சொல்வது? வந்த மனிதரிடமும் அப்படியொன்றும் சாமான் இல்லை. ஒரு பை தான். தனி ஆசாமி. குடும்ப பாரம் எதுவும் கூட வரவில்லை. அவர் விரும்பினால் வேறு வண்டியிலேயே தாராளமாக ஏறியிருக்கலாம். இருந்தாலும் ஏன் இப்படி இதிலேறி வம்பு தும்பு செய்ய வேணும்?

என் மனம் சிறிது நேரம் இப்படித் திரிந்தது; பிறகு எப்படியோ திரிய ஆரம்பித்தது.

செங்கல்பட்டுப் பக்கம் வண்டி ஓடிக்கொண்டிருந்தது; செங்கல்பட்டுக்கு வடபுறமாய் அமைந்துள்ள ஏரியில் நிலவொளி ஒழுகிக் கரைந்து ஒரே வெள்ளி மயமாகக் காட்சியளித்தது. நீரின் சிற்றலைகள் சந்திர வெள்ளத்தோடு கலந்து சிலிர்த்துப் பரந்தன.

நான் வண்டிக்குள் நிகழும் சல சலப்பைக் கேட்காதபடி வெளியே தலை நீட்டி இரைந்து வீசும் இளம் பனிக் காற்றுச் சுகத்தில் சொக்கியிருந்தேன்.

செங்கல்பட்டு ஸ்டேஷனில் வண்டி நின்றது. எங்கள் வண்டியில் புதிதாக யாரும் ஏறவுமில்லை; இறங்கவுமில்லை. வண்டி புறப்படப்போகும் நேரம் வரையிலும் ஒருவரும் ஏறவில்லை. புறப்பட்டவுடன் ஒரு டிக்கட் பரிசோதகர் கைப்பிடியைப் பற்றி உள்ளே தாவினுர்.

அந்தப் பரிசோதகருக்கு வயது ஒன்றும் அதிகமில்லை; என்னைவிட இளையவராய்த்தானிருந்தார். மிஞ்சிப் போனால் இருபத்திரண்டு இருக்கும். முகத்தைப் பார்த்தால் நேரே கல்லூரியிலிருந்தாற்போல் ரயில் உத்தியோகத்தில்

நுழைந்தவர் மாதிரி இருந்தது. வாழ்க்கையில் அடிபட்ட அனுபவ பாவம் முகத்தில் கொஞ்சம்கூட இல்லே. வெறும் ஏட்டுச் சுரை...

கதாசிரியனுன எனக்கு அவரை இப்படியெல்லாம் எடை போடுவது புதிதில்லே. இருந்தாலும் நாமென்ன அவருக்குப் பெண்ணு கொடுக்கப் போகிறேம்? எனவே அந்தப் பாத்திரத்தின் குணநல விமர்சனத்தை ஒதுக்கி வைத்து விட்டு, டிக்கட்டை எடுத்து வைத்துக் கொண்டேன்.

''ஸார், டிக்கட்.''

பலகைமீது படுத்திருந்த மனிதரைத் தட்டி எழுப்பினுர் பரிசோதகர். படுத்திருந்த ஆசாமி சாவதானமாக எழுந்து கண்ணேத் துடைத்துக்கொண்டு, பர்சை எடுத்து, ஒரு ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினுர்,

''டிக்கட் எங்கே?''

''எடுக்கலே.''

''சரி. எங்கிருந்து வருகிறீர்கள்?''

''சென்னேதான். திருச்சி போகணும். செங்கல்பட்டி லிருந்தே எழுதிக் கொடுங்கள். வேண்டியதை எடுத்துக் கொள்ளுங்கள்!''

டிக்கட் பரிசோதகர் ஒரு கணம் பதில் பேசவில்லே. அந்தக் கதாபாத்திரத்தைச் சோதிக்கக்கூடிய கட்டம் வந்து விட்டது என்று என் கதை மனம் என்னுள் கூறியது. செங்கல் பட்டிலிருந்து எழுதினுல், சென்னேயிலிருந்து டிக்கட் இல்லாமல் வந்ததற்கு இரட்டிப்புக் கட்டணம் வாங்க வேண் டாம். அதற்குப் பிரதியாக, காலோ, அரையோ டிக்கட் பரிசோதகர் எடுத்துக் கொள்ளலாம். அதாவது அந்த மனிதர் பரிசோதகரை லஞ்சம் கொடுத்துத் தமக்குச் சகாயம் செய்யச் சொல்கிறுர். இந்தப் பரிசோதகர் அதை ஏற்பாரா? சேச்சே; ஏற்கமாட்டார்...!

ஆனால், பரிசோதகர் அந்த ஐந்து ரூபாயையும் கைநீட்டி வாங்கினார். ரசீதுப் புத்தகத்தை எடுத்து ஏதோ எழுதினார்.

"அட, பாவி! ஆளைப் பார்த்தால் அப்பாவி மாதிரி இருக்கிறார்; இந்த இம்பிட்டுப் பிள்ளைகூட லஞ்சம் வாங்கினால் நாடு உருப்பட்டாற்போலத்தான்" என்று எண்ணினேன்.

ஆனால்...

"இந்தாரும், சென்னையிலிருந்து விழுப்புரம் வரையிலும் 'எக்ஸெஸ்' போட்டு எழுதியிருக்கேன். ரசீது இந்தாரும். மரியாதையாக விழுப்புரத்தில் இறங்கிவிடும். இது ரிஸர்வ் வண்டி. இதில் ஏறினதே தப்பு. அதிலும் டிக்கட் இல்லாமல் ஏறினது பெரிய தப்பு."

"என்ன ஸார்? இப்படிப் பண்ணுறீங்க? உங்க மனம் போல செய்யுங்கோன்னுதானே நான் அஞ்சாகக் கொடுத்தேன்" என்று தன் பேச்சின் சூட்சுமத்தைச் சாதுரியமாக வெளியிட்டார் அந்தப் பிரயாணி.

"என்ன? என்னைப் பிச்சைக்காரன்னு நினைச்சியா, லஞ்சம் கொடுக்கிறதுக்கு. மரியாதையா இரும்; இல்லேன்னா வீணா வம்புதான்!" ஒரே கோபத்தோடு பேசினார் பரிசோதகர்.

என் மனம் சாந்தியடைந்தது. மனிதரைத் தவறாக மதிப்பிடவில்லை என்று ஒரு தெம்பு.

அவர் மற்றவர்களிடமெல்லாம் ரிசர்வேஷன் டிக்கெட், பிரயாண டிக்கட் இரண்டையும் வாங்கிப் பார்த்தார். கையெழுத்திட்டார். என் பக்கத்திலிருந்த ஆசாமி "பாருங்க ஸார், இந்த ஆசாமியும் தாம்பரத்திலேதான் ஏறினார். ரிஸர்வ் பண்ணலே. சொல்லச் சொல்லக் கேட்கலே" என்று புகார் கூறினார். பரிசோதகர் தாம்பரத்தில் ஏறிய ஆசாமி பக்கம் திரும்பினார்.

"உங்க டிக்கட் எங்கே?"

"பாஸ்!"

"பாஸ்'ஹ என்ன; எடுங்க அதை?"

"அதை இப்போ எடுக்க முடியாது, ஸார்."

"இது ரிஸர்வ் வண்டின்னு தெரிமா இல்லையா? இதில் எப்படி ஏறலாம்?"

"ஏறிட்டேன். இப்போ கீழே குதிக்கச் சொல்றேளா?"

"அது விழுப்புரம் வரட்டும், சொல்றேன். இப்போ பாஸை எடுங்கள்."

"முடியாது ஸார்."

"எடுக்கிறீரா, இல்லையா?"

"அதுதான் சொன்னேனே."

"இதென்ன விளையாட்டா? எடும். இல்லேன்ன, உம்மை இறக்கித்தான் விடணும்."

"என் பாஸை உங்களுக்குக் காட்ட வேண்டியதில்லை."

"ஏனும்?"

"நானும் சர்க்கார் உத்தியோகஸ்தன்."

"யாரான என்ன? நான் பாஸைப் பார்த்தாகணும்; இல்லேன்ன பாஸ் நம்பரைக் காட்டும்."

"ஏன் புகார் பண்ணவா?"

"பின்னே?"

"என்னல் முடியாது. நீர் செய்யறதைச் செய்யும்."

பரிசோதகருக்குக் கோபம் உச்சிக்கேறிவிட்டது. முகம் சிவந்து துடித்தது.

"முடிவாக் கேக்கிறேன். எடுக்கிறீரா இல்லையா?"

"முடியாது!"

மறுகணம் பரிசோதகர் அபாய அறிவிப்புச் சங்கிலியைப் பிடித்து, பலமாக நாலைந்து தடவை இழுத்துவிட்டார். சிறிது

நேரத்தில் ரயில் நின்றது. உடனே கார்டு இறங்கி ஓடிவந்தார். ஜனங்களும் என்னமோ ஏதோ என்று இறங்கினர்.

"போலீஸ்! போலீஸ்!" என்று கூப்பிட்டார் பரிசோதகர்.

ஒரு ரயில்வே போலீஸ்காரன் ஓடிவந்தான். பரிசோதகர் கீழே குதித்துப் போலீஸ்காரரைக் கூப்பிட்டு, "அந்த மனிதனை இறக்கு கீழே!" என்று கத்தினர்.

"யாரையா அது? இறங்கு கீழே. என்ன தகராறு?"

அதற்குள் கார்டு விசாரித்தார்.

"என்ன விஷயம்?"

"அவன் எங்கிட்டே சட்டம் பேசறான். என்ன தைரியம்? இறங்கு கீழே" என்றார் பரிசோதகர்.

போலீஸ்காரன் துள்ளிப் பாய்ந்து அந்த அடம் பிடித்த ஆசாமியை இழுத்து இறக்கினான். இறக்கினவுடனே கார்டு தம் கை விளக்கை அவன் முகத்துக்கு நேராகக் கொண்டு போனார்.

அதற்குள் அவன் "என்ன 144, தெரியலையா?" என்றான்.

"யாரு டு நாட் போரரா?"

இதைப் பரிசோதகர் கேட்டுவிட்டார். "நீர் என்ன, கான்ஸ்டேபிளா?" என்றார்.

"ஆமாம்!" என்று பெருமிதத்துடன் சொன்னான் அவன்.

"யாரானா என்ன? பாஸை எடும். நான் விடமாட்டேன்; ரயிலை நிறுத்தினதுக்குக் காரணம் கூறியாகணும். எடும்."

"ஏன் ரிப்போர்ட் செய்யவா?"

"ஆமாம்."

அதற்குள் அந்த ரயில்வே போலீஸ் குறுக்கிட்டான். "என்ன ஸார் விரட்டுறீங்க: அவர் அப்படி என்ன பண்ணிட்டார்?"

''என்ன பண்ணிருரா? ரிஸர்வ் கம்பார்ட்மெண்டிலே ஏறலாமா?''

''பெரிய ரிஸெர்வ்வேஷன்தான்! பஸ்ட் கிளாஸ் பாஸஞ்சர்ஸா? நாலணுக் கொடுத்திட்டா ரயிலே அவுங்க ரயிலாயிடுமா? ஏறிஞ என்னவாம்?''

''ஏம்ப்பா, தேர்ட் கிளாஸ்'ஞ அதிலே போறவன் மட்டும் மனுஷன் இல்லேயா? ரூல்ஞ ரூல்தான்!''

''பெரிய ரூலேக் கண்டுட்டிங்க. விடுங்க ஸார்!''

ரயில்வே போலீசுக்கும் பரிசோதகருக்கும் வார்த்தை முற்றியது.

''அவர் கான்ஸ்டேபிள் என்பதற்காக, நீ என்னே விட்டு விடச் சொல்லாதே. அதுக்கு நான் ஆளில்லே. பாஸை எடு'' என்று முறைத்தார் பரிசோதகர்.

ரயில் நின்று கொண்டே இருந்தது.

கடைசியில், அந்தக் கான்ஸ்டேபிள் தம் பாஸை எடுத்துக் காட்டினர். டிக்கட் பரிசோதகர் அதைக் குறித்துக் கொண்டார். ''நியாயம்ஞ நியாயம்தான். போலீஸ்காரனுக்கு மட்டும் ஒரு வழக்கா?'' என்று முனகிக் கொண்டார்.

ரயில் கிளம்பியது, மீண்டும் அந்தத் தாம்பரம் ஆசாமி எங்கள் வண்டியிலே ஏறிக்கொண்டார். அதைப் பார்த்தவுடன் என் பக்கத்திலிருந்தவர் நாசூக்காகப் பேச ஆரம்பித்தார். தாம் கோள் சொன்ன நபர் ஒரு போலீஸ்காரர் என்று தெரிந்ததும் அவருக்குத் திடீரென்று ஒரு மரியாதை ஏற்பட்டு விட்டது.

''ஏன் ஸார், நீங்க போலீஸ்காரர்ங்கிறதை முதலிலேயே சொல்லியிருந்தா இந்த வம்பு ஏதுக்கு? சும்மா விட்டுட்டுப் போயிருப்பாரே.''

''அதெல்லாமில்லே. இந்த ஆசாமி கொஞ்சம் ரூல் படிச்சவர். திமிரு போகுமா?'' என்ருன் அவன்.

''இதனுலே உங்களுக்குத்தானே சங்கடம்? அவர் உங்க மேலே ரிப்போர்ட் பண்ணிஞ?—என்ன ஆகிறது?''

''ஆகிறதென்ன? அவன் வேலே போயிடும்!''

''என்னது, அவர் வேலே போயிடுமா?''

''ஆமா ஸார்! 'நான் ஒரு' 'அண்டர்கிரவுண்ட்' ஆசாமியைக் 'கவர்' பண்ணி வந்தேன். அவன் இந்த வண்டியிலே தான் இருந்தான். அதனுலேதான் நான் பாஸைக் காட்டலே. அதைத் தெரிஞ்சுக்காமே, அவர் சங்கிலியைப் பிடித்து இழுத்து ரயிலே நிறுத்திக் கலாட்டா பண்ணினதாலே, அவன் இந்த இருட்டிலே இறங்கி ஓடிப் போயிட்டான்' அப்படீன்னு சொன்ஞ, அரசாங்க அலுவலில் குறுக்கிட்டுக் கெடுத்ததாக அவருக்குத்தான் ஸார், வேலே போகும்!'' என்று விளக்கிப் பேசிஞன் தாம்பரம் ஆசாமி.

''அப்படி யாராவது இந்த வண்டியிலே வந்தாஞ, என்ன?'' என்று ஆத்திரத்துடன் கேட்டார், என் பக்கத்து ஆசாமி.

''வந்தால்தாஞ? வந்ததாகச் சொன்ஞல் போச்சு.அதுக்கு 144 சாட்சி சொல்வார். அது மட்டுமா? அந்த ஆசாமியைத் தப்பிச்சு ஓடவிடறதுக்காகவே, இந்த டி. டி. ஆர். இத்தனேயும் பண்ணிஞர் என்று சொன்ஞல், என்ன ஆகும் தெரியுமா, ஸார்? இவரும் அந்தக் கட்சியிலே சேர்ந்தவர், அதுக்கு ஆதாரம் இருக்கு—அப்படீன்னு ஜோடிச்சி அதிலே இவரையும் மாட்டி விட்டுட்டா, இவர்தான் ஸார் கம்பி எண்ணனும் தெரியுமா?''

போலீஸ்காரன்—அவன்தான் அந்தத் தாம்பரம் ஆசாமி—சொன்னதைக்கேட்டு எனக்குத் தூக்கி வாரிப் போட்டது!

''எல்லாம் பொய்தானே, ஸார்!'' என்று கேட்டார் என் பக்கத்து நபர்.

''பொய்யா? பொய்யையும் நிசமாக்கத் தெரியுமே எங்களுக்கு!''

நான் திகைத்துப் போனேன்.

ரயில் விழுப்புரத்தில் நின்றது.

கலைந்துபோன தூக்கத்தால், நான் மீண்டும் பத்திரிகையை எடுத்துப் புரட்டினேன். அதில் நமது பாதுகாப்பு மந்திரியின் பிரசங்கம் வெளியாகியிருந்தது!

''...அன்னிய அரசாங்கத்தில் இருந்ததுபோல் இன்று நம் போலீஸ்காரரைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. இன்று அவர்கள் அரசாங்கக் கூலிகளல்ல, அவர்கள் சமூக ஊழியர்கள்; பொதுஜன சேவகர்கள்...''

நான் மேற்கொண்டு படிக்கவில்லை. சிரித்தேன்.

—1951

# உப்பில்லாத சமுதாயம்

## 1943

‘‘என்னண்ணே, தடுமாடுதே!’’ என்று சொல்லிக் கொண்டே, ராமசாமிக்குத் தோள் கொடுத்துத் தாங்கலாக நடத்திக் கூட்டிக்கொண்டு வந்தான் அவன் கூட்டாளி.

‘‘என்னடா, உளர்ரே? நானு தடுமாடுதேன்? உனக்குத்தான் புத்தி சுவாதீனமில்லே. நாசிக்கிலே ஒரு முழு பாட்டிலே ஒரே மடக்கிலே உள்றத் தள்ளிட்டு, கல்லுப் புள்ளேயார் மாதிரி இருந்தவனுக்கும் நான்?’’ என்று தடுமாறிக் கூறிக் கொண்டே தன்னுடைய அரும்பு மீசையை விரலால் கீறிக் காட்டி வீரம் பேசினான் ராமசாமி.

‘‘தெரியாதா அண்ணே. இருந்தாலும் சாலேக்கரையான் கடைச்சாராயமின்னு, ஒரு டிராம் போட்டாலும் இரண்டு டிராம் ஆட்டம் போடும்ணே’’ என்றான் தோழன்.

‘‘எத்தனே கிளாஸ் போட்டாத்தான் என்ன? வீட்டுக்குப் போனு பெத்தவ படுத்திருக்க இடமும் தெரியும். பெஞ்சாதி படுத்திருக்க இடமும் தெரியும். இவ்வளவு அடிச்சிருக்கேனே. நாக்குப் பிறழுமா? வார்த்தை பிசகுமா? ஊஹூம்’’ என்று கூறி முகத்தைச் சுழித்தான் ராமசாமி.

அதற்கு மேல் அவனுக்கு நாக்கு வளேயவில்லே.

போதையேறி மரத்து, பெருங்கால் பிடித்தது போல் கனத்திருந்த கால்களைத் தூக்க முடியாமல் தூக்கி நடந்தான் ராமசாமி. மேலும் பட்டைச் சாராயத்தின் காரமான நெடி தொண்டைக் குழியிலிருந்து கமறலாக எழுந்து மூச்சைத் தாக்க, அவனுக்கு ஓங்கரிப்பு வந்தது. மறு நிமிஷம் குபுக்கென்று வாந்தியெடுத்தான்.

ராமசாமி ஒரு வருஷத்துக்கு முன்னுல் யாரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் சண்டையிலே சேர்ந்து விட்டான். சேர்ந்துவிட்டால், பின்னுல் திரும்பி வரும்போது இந்தியாவின் வைஸ்ராய் ஸ்தானம் தனக்கென ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் என்ற சாணக்கியத் தந்திரமோ, உலகை ஆக்கிரமிக்கத் துணிந்த பாஸிஸப் பேயை விரட்டி யடிப்பதில் தன் உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தம் செய்ய எண்ணும் லட்சியக் கனவோ அவனுக்குக் கிடையாது. அவன் கண் முன் நின்றது ஒன்றே ஒன்றுதான். ஒரு சாண் வயிறு. 'இலவச உடை; உணவு; இருப்பிட வசதி, இத்தனைக்கும் மேலாக சுளை சுளையாய்ப் பதினறு ரூபாய் சம்பளமும்; படியும்,' என்ற விளம்பரந்தான் அவனை ராணுவத்தில் இழுத்துவிட்ட மந்திரமும் தந்திரமும். மேலும் லீவிலே தன் ஊருக்கு வந்து செல்லும் சிப்பாய்கள் தாட் பூட்டென்று "ஏக் தீன்கா சுல்தான்" ராஜ்யம் நடத்தி விட்டுத் திரும்பிச் செல்லும் வைபவமும் அவனுக்கு ராணுவத்தில் ஒரு மோகத்தைக் கிளப்பி விட்டது.

ராணுவத்திலே் சேர்ந்து ஒரு வருஷ காலம் பயிற்சி பெற்ற பின்பு, இப்போது ஒரு மாச லீவில்—சம்பளத்தோடும் போகவர ரயில்வே வாரண்டும், வழிச்செலவும் தந்தனுப்பிய அந்த லீவில், — ராமசாமி சொந்த ஊருக்கு வந்திருந்தான். ஆனல் ஆசாமி பழைய மாதிரி இல்லை. ராணுவத்திலே விடிய விடிய ட்ரில் செய்து வயிறு வளர்க்கும் வேலை அவனுக்கு ஏதோ குபேர சம்பத்து போலத் தோன்றிற்று. அதன் விளைவாக அவன் வாயிலே எப்போதும், 'ஓயில்ட் உட்பைன்', சிகரெட் புகைந்து புகைந்து கொடி வீசும். பக்கத்திலே நெருங்

கினுல் சாராய நாற்றமும் அடிக்கும். இந்த ஒரு வருஷ வாழ்க்கை அவனை எப்படி யெல்லாமோ மாற்றியிருந்தது. மஸ்துச் சாப்பாடான 'டாலும்' 'ஆட்டா ரொட்டி'யும் 'கோஷ'ம், அவன் உடம்பிலே புதுமெருகும் மினுக்கும் வலிவும் ஊட்டியிருந்தன. மேலும், வாரா வாரம் ஹவில்தார் மேஜரிடம் அவுட் பாஸ் வாங்கிக்கொண்டு நாசிக்குக்குச் செல்வான்; "அண்ணு! ஆவ் ஜி இதர்!" என்று அருமையாய் ஒரே ஒரு தமிழ் வார்த்தைப் பிரயோகத்தோடு அழைக்கும் மராத்திய விபசாரிகளிடமும் அவன் சுகங் கண்டு பழகியிருக்கிருன்.

இத்யாதி அனுபவங்களோடு பசை போட்டுத் தேய்த்து விறைப்பேறி நிற்கும் காக்கிச் சட்டைப் பையில் அழுக்கையும் மடிப்பையும் அறியாத புது ரூபாய் நோட்டுகள் சர சரக்க அவன் பிறந்த ஊரில் ஒரு மாச காலம் மஜா பண்ண வந்திருந்தான். மிலிடெரியிலிருந்து வந்தும் அவன் தனது படா பூட்டுகளையும், காக்கிச் சட்டையையும் கழற்றவில்லை. அந்த உடையிலே திரிவதில் அவனுக்கு ஒரு தனிக் கௌரதை.

அன்றும் அவன் அப்படித்தான் தன்னுடைய கூட்டாளி ஒருவனுடன் சாலைக்கரையான் சாராயக் கடையில் 'அமுத பானம்' பண்ணிவிட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தான்.

ராமசாமி வாந்தியெடுத்த பின் அவனுடைய தோழன் அவனைத் தூக்கி நிறுத்திப் பக்கத்திலுள்ள வாய்க்கால் பாலத்தருகே நடத்திச் சென்று உட்கார வைத்தான். சரக்கு வெளியேறிவிட்டதால் போதை ஓரளவு தெளிந்திருந்தது. ஒன்றும் பேசாமல் வாயில் கூடிவரும் எச்சிலைக் காறித் துப்பிக்கொண்டிருந்தான்.

அப்போது அந்த வழியாய் லக்ஷ்மி கூடையை இடையில் வைத்துக் கொண்டு பரக்கப் பரக்க அவர்களைக் கடந்து சென்ருள். அவள் செல்வதை ராமசாமி கண்டுவிட்டான். கனத்திருந்த கண்களைக் கொட்டக் கொட்டத் திறந்து கொண்டு, பக்கத்திலிருந்த நண்பனைக் கேட்டான்:

''யார்ரா, அவ?''

''அவளா? மேலத்தெருப்பெண்ணு. லக்ஷ்மின்னு பேரு''

''குட்டி ரதி மாதிரியிருக்காளே. அடிபாடு உண்டோ?''

''யாருக்குத் தெரியும்?''

அவசர அவசரமாய்ச் சென்றுகொண்டிருக்கும் லக்ஷ்மிக்கு இதெல்லாம் காதில் விழ நியாயமே இல்லே. யாரோ ரெண்டு குடிகார மட்டைகள் என்று எண்ணிக் கொண்டே அவள் பறந்தாள். அவள் மனசில் நின்றதெல்லாம் ஒரே ஒரு எண்ணம்; ஒரு படி அரிசி.

அந்த அரிசிக்காக மாரியம்மன் பூக்குழிக்குத் தன் தாய் தன் பேரில் நேர்ந்து மஞ்சள் துணியில் முடிபோட்டு வைத்திருந்த காசைத் தெரியாமல் எடுத்துக் கொண்டு அரிசிக் கடையை நோக்கி விரைந்து கொண்டிருந்தாள்.

அன்று அவளே ரக்ஷிக்கப்போவது மாரியம்மன் அல்ல; ஒரு படி அரிசி. அன்றும் கிடைக்கவில்லேயானல், அவளும் அவள் தாயும் அவித்த சீனிக் கிழங்கையும், ஏழிலேக் கிழங்கையும் நிலக்கடலேயையும் தின்று தான் வயிற்றுப் பாட்டைக் கழிக்க நேரும்.

அந்த ஒரு படி அரிசியைப் பெறுவதற்காக இன்று சமைந்து, பெரிய மனுஷியாகி வீட்டுக்குள் அடங்கியிருக்க வேண்டிய பதிறைறு வயசுக் குமரி பட்டப் பகலில் பஜார் வீதியில் கூட்டத்திலே இடிபட்டுக் கொண்டு செல்ல வேண்டும்.

அந்த ''ஏழை மக்கள் அரிசிக் கடைக்''குச் செல்வது அவளுக்குப் புதிதல்ல. முன்னல் ஒன்றிரண்டு தடவை தன் தாயோடு சென்றிருக்கிருள்.

அங்கு அவள் பெற்ற அந்த அனுபவங்கள்! அதை நினேக்க நினேக்க கடைக்கே செல்லாமல் திரும்பிவிடலாமா எனத் தோன்றும்.

அவள் நடந்தாள்...

அந்த அனுபவங்கள்—

அந்த அரிசிக் கடையில் ஆணும் பெண்ணும் ஒருவரோடு ஒருவர் விழுந்தடித்துக்கொண்டு கடை மீது சாடுவார்கள். சமயத்திலே வாங்குகிற அரிசி கொட்டிப்போகும்; சமயங் களில் கையிலுள்ள காசே பிடி தவறி, சாக்கடையில் விழுந்து விடும்; சில சமயம் ஆட்களே விழுந்து விடுவார்கள். அன்றொரு நாள் கூட்டத்தில் இவளுடைய சேலை அகப்பட்டுக் கொண்டு தோளில் கிடந்த முன்தானை விலகி, தன் கட்டமைந்த மார்பும், உடம்பும் வெட்ட வெளிச்சமானதும், அதைக் கூர்மையுடன் பார்த்த அந்தப் போலீஸ்காரன் தன்னைப் பார்த்துச் சிரித்துக் கண்ணடித்ததும், கடைக்காரன் அரிசியைக் கூடையிலே கொட்டும்பொழுது வேண்டுமென்றே இவள் மார்பில் இடித்ததும், காசு வாங்கும்போது கையைச் சுரண்டியதும்...

அவளுக்கு அதையெல்லாம் எண்ணினால் வெட்கம் உடம்பைப் பிய்த்துப் பிடுங்கும்.

அவள் விரைவாக நடந்தாள்; நடந்தாள்......

ஆனால் அந்தக் கடையைச் சேர்ந்தவுடன்தான் அவளுக்கு விஷயம் புரிந்தது. கடை முன்னால் சிந்திக்கிடந்த அரிசி மணிகளை ஒரு புறாக்கூட்டம் கொத்திப் பொறுக்கிக் கொண் டிருந்தது. ஒன்றிரண்டு சோமாறிப் பையன்கள் கடை முன்னுள்ள சாக்கடைச் சகதியை அள்ளி அள்ளி ஏதேனும் காசு கிடைக்காதா என்று துழாவிக் கொண் டிருந்தார்கள்.

அரிசி விநியோகம் முடிந்து கடை சாத்தியாய் விட்டது.

அன்று லக்ஷ்மிக்கு அரிசி கிடையாது; அவள் தாய்க்கு கஞ்சி—அதுவும் கிடையாது. லக்ஷ்மிக்குக் கண்ணில் நீர் முட்டிக்கொண்டு வந்தது.

வேறு விதியின்றித் திரும்பி நடந்தாள்.

வருகிற வழியில் அந்த வாய்க்கால் பாலத்தில் அந்தக் குடிகார மட்டைகள் இன்னும் இருப்பதையும், அவர்கள் தன்னைக் குர்ரென்று பார்ப்பதையும் அவள் கவனித்தாள். உடனே வாழையிலைத் தார்போலக் கிழிந்து தும்பாய்ப்போன தன் சேலையால் தனது மார்பகத்தை மூட முயன்றுகொண்டு, அரிசிக் கூடையை அணைத்துக்கொண்டு, பாலத்தைக் கடக்க முனைந்தாள்.

"ஏய், லக்ஷ்மி! நில்லு!" என்று ராமசாமி கொடுத்த குரல் அவளைத் திடுக்கிட வைத்தது. தன்னையும் அறியாமல் அவள் நின்றாள். நெஞ்சு துடித்தது.

"என்னா சும்மாப் போரே. கம்மாக்கரைப் பக்கமா வாரியா?" என்று சிரித்துக்கொண்டே ஒரு புத்தம் புதுப் பத்து ரூபாய் நோட்டை நீட்டினான் அவன்.

அந்த சரஸப் பேச்சைப் புரிந்துகொள்ள முடியாத அளவுக்கு லக்ஷ்மி சிறியவளல்ல.

"...சீத் தூ!...மாட்டுக்கறி தின்ன கொழுப்பா இப்படிப் பேசச் சொல்லுது!" என்று காறித் துப்பிவிட்டு நடையைப் போட்டாள்.

அதற்குள் ராமசாமி அவளை வழிமறித்தான். அவளுடைய களை பொருந்திய முகமும் கட்டுக் கலையாத தேக வனப்பும் அவனைக் கிண்டின.

"இந்தா பாரு, பத்து ரூபா சும்மா வராது!" என்று கூறிக்கொண்டே அவளை அணையப் போனான்.

"நீ நாசமாய்ப் போக!" என்று திட்டிக் கொண்டே லக்ஷ்மி அவனைத் தன் கூடையால் இடித்துத் தள்ளிவிட்டு ஓடிவிட்டாள்.

கீழே விழுந்து எழுந்திருந்த ராமசாமி "அடேயப்பா! பெரிய பத்தினித் தங்கந்தான்! குடுத்து வைக்காதவ. இவ இல்லாட்டா, ஊரிலே பொம்பளேகளே இல்லாமலா போயிட்டா! மாடத் தெருவுக்குப் போறு...." என்று முனகிக் கொண்டே அரும்பு மீசையை விரலால் கீறிக் காட்டினுன்.

"என்னண்ணே 'பிளேன்' இறங்கிட்டுதே!" என்று சலித்துக் கொண்டான் பக்கத்திலிருந்த தோழன்.

"சரி, வா, சாலேக்கரையான் கடைக்கு!" என்று முனகிவிட்டு, அவன் தோளில் கையைப் போட்டான் ராமசாமி.

## 1947

—ஐந்து வருஷங்கள்!

திருவனந்தபுரம் எக்ஸ்பிரசில் தென் திசை நோக்கி வந்துகொண்டிருந்த ராமசாமி தனது கடந்த ஐந்து வருஷ கால ராணுவ சேவையை எண்ணிப் பார்த்தான்...

பர்மாவில் ஜப்பானியரின் குண்டு மழைக்கிடையில் போராடிய 'பதினுலாம் சேனே'யில் தான் செய்த சேவை; அக்யாப் போர்முனையில் பதினுறு மைல் தூரக் காட்டுப் பாதையில், தோளில் பெரிய மூட்டைகளேச் சுமந்து இரவோடு இரவாய் நடந்து சென்ற ரூட் மார்ச்; ஸெண்ட்ரி ட்யூடியில் பாம்புகள் நடமாடும் வனப் பிராந்தியத்தில் குளிரும் கொசுவும் வாதைப்படுத்த, இரவு முழுவதும் பாராக் கொடுத்த வைபவம்; இடையிலே ராணுவ ஆஸ்பத்திரியில் காய்ச்சலாய்க் கிடந்ததும், அப்போது அங்குள்ள நர்ஸ் ஒருத்தியைக் கையைப் பிடித்திழுத்ததும்; அதன் விளேவாகக் கிடைத்த இருபத்தொரு நாள் சிறைவாசம்; சிங்கப்பூரிலே கையிலிருந்த கடிகாரத்தைக் கழற்றிக் கொடுத்துவிட்டு ஒரு பாக்கெட் சிகரெட் வாங்கிக் குடித்தது; ஆக்கின் லெக்

துரை தன் கைப்படத் தன் சட்டையில் மாட்டிய வெள்ளிப் பதக்கம்...!

எத்தனை அனுபவங்கள்...எல்லாம் அவன் ஞாபகத்துக்கு வந்தன.

அவன் ராணுவ சேவையிலிருந்து விடுபெற்று வீடு திரும்பி வந்து கொண்டிருந்தான். கையிலே நானூறு ரூபாய் நோட்டுக்கள்; டிஸ்சார்ஜ் சர்டிபிகேட்; ஊரில் சென்று மீண்டும் "சிவில்" உத்தியோகத்தில் நுழைய காப்டன் ஜலண்ட் தம் கைப்பட எழுதிக் கொடுத்த சிபாரிசுச் சீட்டு; மெட்ராஸ் மூர்மார்க்கெட்டில் வாங்கிய டிரங்குப் பெட்டி; பழைய விலைப் புத்தகக் கடையில் வாங்கிய ஆங்கில சுயபோதினி; அழகிய ஆப்டோன் படங்களுடன் கூடிய 'ரதி மன்மத லீலை விளக்கம்' — இத்யாதி சகிதம் அவன் ஊர் திரும்பி வந்து கொண்டிருந்தான்.

"ஊர் சென்றவுடன் என்ன பண்ணுவது?"

"—இந்த நானூறு ரூபாயில் இருநூறு கொடுத்து முன்னே ஒத்திக்கு எழுதிக் கொடுத்த வீட்டைத் திருப்ப வேண்டும்.

"பிறகு கிராம முனிசீப் ஐயாவுக்கு ஏதாச்சும் கொடுத்து தாசில்தார் எசமானுக்கு முன்னே புஞ்சை நில மானியத்துக்கு எழுதிப் போட்ட மனுப்படி நிலங்களைப் பெற வேண்டும்.

"பிறகு — காப்டன் சாப் காயிதத்தை எக்ஸ்சேஞ் ஆபீஸில் கொடுத்து, தாலுகா ஆபீசிலே ஒரு பியூன் வேலையாவது பெறவேண்டும்...அதன்பின் ராஜாதான்..."

இன்பக் கனவுகளில் மிதந்தவாறே ஊர் வந்து சேர்ந்தான். சேர்ந்தவுடன் இருநூறு ரூபாய் கொடுத்து வீட்டைத் திருப்பினான்.

மீதி இருநூறு....

புஞ்சை நில மான்ய மனு வெற்றி பெற கி. மு. பிள்ளைக்கும், தாசில் சேவகனுக்கும் ஐம்பது வரை வாய்க்கரிசி அளந்தான். கடைசியில் நில மானியம் பகற்கனவாயிற்று.

பிறகு, சோல்ஜர்ஸ் போர்டுக்குள் இவன் நுழையவே முடியவில்லை. அங்குள்ள துவாரபாலகக் கிங்கரர்கள் அவனை அவ்வளவு லகுவில் அனுமதிக்கவில்லை. அந்தப் பணம் பிடுங்கிப் பிசாசுகளுக்கு இவன் அழுது தொலைக்க வேண்டியிருந்தது. ஆபீஸரையாவிடம் நேரில் அழைத்துப் போய் சிபாரிசு செய்வதாகச் சொல்லி அங்கிருந்த 'நாயக் சாப்' ஐம்பதுக்கு மேல் கரைத்துவிட்டான்.

பணம் கரைந்தது; வேலை கிடைக்கவில்லை.

இடையிடையே சாலைக்கரையான் தனக்குரிய கப்பத்தையும் வசூலித்துக் கொண்டிருந்தான்.

வேலை வேலை—வேலை; அது மட்டும் கிடைக்கவில்லை. அவனுடைய கனவுகள் நொறுங்கின.

அன்று கடைசியாய்த் தன் பையில் மிஞ்சிய இரண்டணாக் காசோடு அந்த ஆபீஸைப் படையெடுத்தான்; அந்த நாயக் அவனைப் பதம் பார்த்து, ஆசாமி 'ஐ பி.' என்று தெரிந்ததும் விஷயத்தை விளக்கமாகவே கூறிவிட்டான்.

"அட சர்த்தான் போய்யா." நீங்க வருவீகன்னு இங்கு வேலையை வெத்திலை பாக்கு வச்சா தாங்குதாஹ? சண்டை காலத்திலே ஜாஸ்தியாய்ப் போட்ட ஆட்களையே தள்றதுக்கு வேட்டு வச்சிக்கிட்டிருக்காக. வேலை வேணுமாமில்லே வேலை! வீடு வாசலிருந்தாப் போய்ச் சேரு. வீணா எதுக்கு மாதாந்தம் வந்துகிட்டிருக்கே...!" ராமசாமிக்கு அந்த வார்த்தையின் ஏளனமும், ஏமாற்றமும் கோபத்தைக் கிளறின.

"அட நாசமாப் போறவனே! எங்கிட்டப் பிடுங்கிப் பிடுங்கித் தின்ற திமிராடா இப்படிப் பேசச் சொல்லுது? உன்

எழவுக்கு ரூபா நூறில்லே அழுதுதொலேச்சேன்" என்று சண்டை பிடித்தான்.

ஆனல் பலன்? இவனுடைய பிடரியைப் பிடித்துக் காம்பவுண்டுச் சுவருக்கு வெளியே தள்ளிவிட்டதுதான் மிச்சம். ரோட்டில் நின்றுகொண்டு வாய்க்கு வந்தவாறு திட்டினன். வாய் சளேத்தபின் மண்ணே வாரி இறைத்து விட்டு நடந்தான்.

பையிலோ டவுனுக்குப் பஸ் ஏறக்கூட ஒரு அணக் கிடையாது. ஒரு பீடி வாங்கக்கூடக் காசில்லே. பைத்தியம் மாதிரிக் கால் நடையாய் நடந்தான்.

ஊருக்குள் நுழைந்தவுடன் குறுக்குப் பாதைக்காக, "அந்தத் தெரு" வழியே திரும்பினன். மனசிலே பழைய நினைவு. முன்ெனாரு தடவை குடித்துவிட்டு, இந்தத் தெருவிலே மஜா பண்ணிய ...

"என்னப்பா, சும்மாப் போரே! வாரியா? ரொம்ப இல்லே ரெண்டு ரூபாத்தான்" என்று கூப்பிட்டுச் சிரிப்பது காதில் விழுந்தது.

குரல் வந்த திசையில் தலேயைத் திருப்பினன். அங்கு ஒரு 'சரக்கு' நின்றுகொண்டிருந்தது.

நெற்றியிலே கால்துட்டு அகலத்திலே கருஞ்சாந்துப் பொட்டு; முகத்திலே பவுடர்; உதட்டிலே வெற்றிலேக் காவி; காதிலே 'சாயம்' வெளுக்க ஆரம்பிக்கும் கில்ட் லோலக்; கோணல் வகிடு எடுத்துக் கொண்டை போட்ட கூந்தலில் ஒரு மல்லிகைப் பூ ஆர்ச்; மார்பில் வரிந்து கட்டிய பாரகூட் சில்க் பாடீஸ்; அந்த மேலாக்கு விலகி...

ராமசாமி ஏறிட்டுப் பார்த்தான்; கூர்ந்து பார்த்தான்.

"என்னப்பா முழிக்கிறே?" என்று கேட்டது அந்தப் பதினெட்டாம்படிப் பதுமை.

அவன் நினைத்தான் : "யார் இவள்?"

அவனுக்கு நினைவு வந்தது—அன்று ஒரு நாள் வாய்க்கால் பாலத்தில் நான் வழி மறித்தேனே அதே பெண்...அதே லக்ஷ்மி!

அவனுக்குத் தலை சுற்றியது. நெற்றிப் பொருத்தை அழுக்கிப் பிடித்தவாறு நடையை எட்டிப் போட்டான்.

—1947

# ஒரு முழக் கயிறு

விக்டோரியா மியூஸியம் வந்ததும் டிராமை விட்டு இறங்கினேன். இத்தனை நேரமும் ஆபீசுக்குள் வெந்து புழுங்கிய உடலுக்கு, கடற் காற்றுவது ஓரளவு இதம் கொடுக்கும் என்று நினைத்தேன். எனவே வேறு யோசனை எதுவுமின்றிக் கடற்கரையை நோக்கி நடந்தேன்.

எனக்கு எதிரே, தூரத்திலே தெரியும் கடல் பரப்பின் அடி விளிம்புக்கு மேலே மேலே வானத்தின் செக்கர் ஒளி மட்டுமே மிஞ்சி நின்றது. சூரியன் மேலை நாடுகளுக்கு ஒளி வழங்கப் போய்விட்டான். இருள் படம் விரித்து உலகை விழுங்கத் தொடங்கியிருந்தது. கடலின் அலை வெள்ளம் முழுவதும் ஈயக் கலப்புக்கொண்ட செம்புக் குழம்பு மாதிரி தகதகத்துத் துடித்தது. அந்த ஜோதிப் படலத்தின் முன்னே 'இந்தியாவின் தலைவாசல்' கன்னங்கரியதாக விளிம்பு கட்டித் தோன்றியது.

அந்தத் தலைவாசலை நெருங்கியதும் கடலை அணைத்துக் கரையாக நிற்கும் சுவரின்மீது உட்கார்ந்து, அந்த வாசலை நிமிர்ந்து பார்த்தேன்.

'இந்தியாவின் தலைவாசல்—Gateway of India! நல்ல பெயர். அற்புதமான கட்டிடம்! ஆம் தலைவாசல் தான்! இந்திய மக்கள் வெளிநாட்டாரோடு-மேல் திசை மக்களோடு, எகிப்து, இத்தாலி, ஹங்கேரி, ஜெர்மனி, பிரான்ஸ், பிரிட்டன் முதலிய சகல நாட்டு மக்களோடும் கூடிக் குலவுவதற்கு, கலா சாரப் பரிவர்த்தனை செய்வதற்கு, அவர்களது இன்ப துன்பங் களில் பங்கெடுப்பதற்கு...அகில உலக சகோதரத்துவத்துக்

கும் வழி திறந்து நிற்கும் ஆசார வாயில் போலல்லவா நிற்கிறது...'

கிரீச் சென்ற சப்தம் என் காதோடு உராய்ந்துகொண்டு சென்றது. ஏறிட்டுப் பார்த்தேன். வலப்புறத்தில் நீர் மட்டத்தில் கட்டிப் போட்டிருந்த தோணியின் பாய்மரக் கொம்பிலிருந்து கடற் பறவைகள் திடீரென்று என் தலைக்கு மேலாக ஜிவ்வென்று பறந்து தண்ணீருக்குள் பாய்ந்தன!

என் சிந்தனையும் தடம் மாறிவிட்டது.

நான் மீண்டும் அந்தத் தலைவாசலைப் பார்த்தேன்.

'ஆனால் இந்தத் தலைவாசல் அதற்காகவா கட்டப் பட்டது? இல்லையே! ஜார்ஜ் மன்னன் இந்தியாவுக்கு, டில்லி தர்பாரில் மகுடாபிஷேகம் பண்ணுவதற்காக வந்தபோது அந்த மன்னன் இந்திய மண்ணில் காலடி எடுத்து வைக்க, இந்தியாவுக்குள் புகுந்து சக்கரவர்த்தி என்று பிரகடனப் படுத்துவதற்காகக் கட்டப் பெற்ற தலைவாசல்தானே இது; அந்த மன்னனுக்கு விரித்த கல்லான நடை பாவாடைதானே இந்தக் கட்டிடம்! தலைவாசலா, இல்லை விலை வாசலா?... ஆம்.'

"அவமானம், அவமானம்!" என்று எங்கிருந்தோ ஒரு கனத்த குரல் எதிரொலிப்பது மாதிரி இருந்தது. அறுபட்டுத் தொங்கும் சிந்தனையோடு நான் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன்.

"அவமானம், அவமானம்!" என்று கத்திக்கொண்டே என்னை நோக்கி ஒரு மனிதன் வந்தான். தெரிந்த நண்பனோ என்று கூர்ந்து நோக்கினேன்; அந்த இருளில் முகம் தெரிய வில்லை. ஆனால் அவன் அருகில் நெருங்கி வந்ததுமே நான் திடுக்கிட்டுப் பின்வாங்கினேன்.

அந்த மனிதனை எனக்கு முன்பின் தெரியாதது மட்டு மல்ல, அவனது தோற்றமே எனக்குப் பயம் அளிப்பதாக இருந்தது. மண்டி வளர்ந்து முகத்தில் பெரும்பாகத்தை மறைத்து நிற்கும் கரிய தாடி மீசை—எண்ணெய்ப் பசையே

அறியாது வறண்டு போய் முள்ளம்பன்றியைப் போல் சிலிர்த்து நிற்கும் தலைமயிர்—பாசி படிந்து ஆழக்குழி விழுந்து மங்கிப் பிரதிபலிக்கும் கண்கள்—தாறுமாறுகக் கிழிந்து அலங் கோலமாய்க் கிடக்கும் சட்டை—மஞ்சள் பூத்து விகாரமாகத் தெரியும் பற்கள்—

ஒரே கணத்தில் நான் அவன் தோற்றத்தை அளவிட்டு உணர்ந்து கொண்டேன்.

"பைத்தியமோ?"—என் மனம் இந்தச் சிந்தனையில் ஈடுபடும் முன்னரே, அந்தச் சிந்தனையை வலியுறுத்தி என்னைப் பயமுறுத்தவும் செய்தது, அவன் கையில் தொங்கிய அந்தப் பொருள்! அதுதான்—ஒரு முழக்கயிறு.

தூக்குப் போடுவதற்காகச் சுருக்கிட்டுத் தொங்கவிட்ட மாதிரி அவன் அந்தக் கயிற்றைக் கையில் தூக்கிப் பிடித்து ஊசலாட்டிக் கொண்டே வந்தான். எனக்கு ஒரே பயமாகி விட்டது 'ஒரு வேளை இந்த மனிதன் தூக்குமேடையிலிருந்து தப்பி வந்துவிட்டானு? அல்லது தூக்குப் போடும்போது இந்தக் கயிறு அறுந்துபோய் விட்டதா?...மரணத்தின் பிடியி லிருந்து தப்பி வந்தவனு? இல்லை, வேறு யார் கழுத்திலேனும் இந்தக் கயிற்றை மாட்டப் போகிறுனே? ஒரு வேளை என் கழுத்துக்கேதானு?'...அந்தப் பைத்தியத்திடமிருந்து தப்பிப் பிழைத்தால் போதுமென்று இருந்தது.

"பயப்படாதீங்க ஸார். நான் உங்களை ஒன்றும் செய்ய மாட்டேன். அவன்தான் அப்படிச் சொன்னுன்! அவள்தான் அப்படிச் சொன்னுள்! எனக்கா ஒரு முழக்கயிறுக்கு விதி யில்லை? இதோ இருக்கு ஸார்! இதோ இருக்கு...அவனுக்குத் தான் ஸார் விதியில்லை! அவனுக்குத்தான் இல்லை..."

என் வாய் என்னையுமறியாமல் "எவனுக்கு" என்று கேட்டுவிட்டது.

"அதைச் சொல்லத்தானே வந்தேன். ஓடாதிங்க ஸார். நான் உங்களை ஒன்றும் பண்ணமாட்டேன். இதோ பாத்திங் களா கயிறு!...என்னைப் பார்த்தா உங்களுக்குப் பயமா

யிருக்கா? பயப்படாதிங்க......நானும் உங்களை மாதிரி மனுஷன் தான்...உங்களை மாதிரி நாலு எழுத்துப் படிச்சவன் தான். உங்களை மாதிரி வேலை பார்த்தவன்தான்...உங்களை மாதிரி பெண்டாட்டி பிள்ளைகளோடு குடித்தனம் பண்ணிய வன் தான்...

அவனுடைய 'உங்களை மாதிரி' சீக்கிரத்தில் நிற்காது மாதிரி தோன்றியது. எனவே நான் குறுக்கிட்டேன். மேலும் அவன் அப்படி ஒன்றும் முழுப்பைத்தியமாகத் தோன்ற வில்லை. எனவே நானும் அவனிடம் மெதுவாகப் பேச்சுக் கொடுத்து அவன் என்னதான் சொல்ல விரும்புகிறான் என்பதை அறிய முயன்றேன்.

இருள் பரிபூரணமாகக் கவிந்துவிட்டது. வானத்தில் பொட்டுப் பொட்டாக நட்சத்திரங்கள் வெடித்துப் பூத்தன. தூரத்தில் ஒரு கப்பலின் வெளிச்சம் தெரிந்தது. கடற்கரை அருகேயுள்ள மின்சாரக் கம்பங்களிலிருந்து மங்கிய நீல ஒளி சோகக் கண்ணீர் வடிப்பது போல் அழுது வடிந்து கொண் டிருந்தது. அவன் தன் கதையை சொல்ல ஆரம்பித்தான்.

''நானும் பி. ஏ. வரையிலும் படிச்சிருக்கேன் சார். முன்னாலே நம்ம காந்தி, நேரு முதலியவர்களையெல்லாம் வெள்ளைக்காரன் ஜெயில்லே புடிச்சி அடைச்சானே, அப்போ நானும் 'வெள்ளையனே வெளியேறு' என்று சொன்னேன்! போராட்டத்தில் சேர்ந்தேன். தடியடியும் கிடைச்சிது; ஜெயிலும் கிடைச்சிது.''

'' அப்புறம்?''

''நானும் பெண்டாட்டி பிள்ளையோடு குடித்தனம் பண்ணினேன் ஸார். வயிற்றுப் பிழைப்பு ஒன்று இருக்கே. அதனாலே நம்ம நாட்டுக்குச் சுதந்திரம் வந்த பின்னாலே நானும் சர்க்கார் உத்தியோகத்துக்கு மனுப் போட்டேன் ஸார்.''

''வேலை கிடைக்கலையா?''

''கிடைச்சிது ஸார். கிடைச்சிது. வியாபார வரி ஆபீஸிலே அஸிஸ்டெண்ட் ஆபீஸர் உத்தியோகம் கிடைச்சிது. வேலையும் பார்த்தேன்...சரி. 'கள்ள மார்க்கட்காரனை லாந்தர் க''பத்திலே தூக்குப்போட வேண்டும்' என்று சொன்னது யார் தெரியுமா, ஸார்?''

''தெரியும், தெரியும். நீ பாட்டுக்குச் சொல்லிக் கொண்டு போ'' என்று அவசரப்படுத்தினேன் நான்.

''தெரியாதவங்க யாருதான் இருக்கா? ஒருத்தருமில்லே'' என்று கூறிக்கொண்டே அவன் ஒரு பெருமூச்செறிந்தான். பிறகு ''அந்தப் பேச்சைக் கேட்டுத்தான் ஸார், இந்தக் கதிக்கு ஆளானேன் ஸார்'' என்றான் அவன்.

'நான் வேலை பார்த்து வந்த இடத்திலே ஒரு பெரிய மில் இருந்தது. அது நம்ம நாட்டிலுள்ள பெரிய பணக்காரன் ஒருத்தனுடைய மில். அந்த மில் கணக்கைச் சரி பார்க்க வேண்டிய கடமை எனக்கு நேர்ந்தது. பார்த்தேன். ஆனால் கள்ள மார்க்கெட் பண்ணாத வியாபாரி எவன் ஸார் இருக்கான்? அதிலும் பணக்காரன் என்றால் கேட்க வேண்டுமா? கணக்கிலே கிட்டத்தட்ட ஒரு கோடி ரூபாய்க்கு விவரமே இல்லே ஸார். அந்த ஒரு கோடி ரூபாயை என்ன செய்தார்கள் என்றே தெரியவில்லை. அதனாலே நான் எல்லாக் கணக்குப் புத்தகத்தையும் கொண்டு வரும்படி உத்தரவு போட்டேன் ஸார். போட்ட தேதிக்கு எந்தக் கணக்குமே வரலே ஸார்''

''அப்புறம்?''

''அப்புறம் கணக்குக்குப் பதிலாக அந்த மில்லின் மானேஜரே என் வீட்டைத் தேடி வந்தான். கட்டுக் கட்டாக லட்ச ரூபாயை என் முன்னாலே நீட்டி அதை லஞ்சமாக ஏற்றுக்கொள்ளச் சொன்னான். ஏற்றுக் கொண்டு அந்த விவகாரத்தை அப்படியே அமுக்கி விடும்படி கேட்டான் ஸார். நீங்களே சொல்லுங்க, லஞ்சம் வாங்கிப் பிழைக்

கிறவனை மனுஷன்னு சொல்லலாமா? கள்ளமார்க்கெட் காரனைத் தூக்கிலே போட்டால், லஞ்சம் வாங்குகிற அதிகாரியைக் கழுவிலே போடவேண்டியதுதான். இல்லையா?''

''ஆமாம், ஆமாம். சரி. நீ மேலே சொல்லு.''

''எனக்குப் பெரிய குடும்பம் ஸார். என்னை நம்பி வாழ்ந்த வங்க எத்தனையோ பேரு ஸார். வாங்குகிற சம்பளம் வயிற் றுக்கே பத்தறதில்லே. சம்பளம் பத்தலேன்னு, சண்டை போட்டு அதிகமாகக் கேக்கலாமே ஒழிய லஞ்சம் வாங்கலாமா? அப்படி வாங்கின கைதான் உருப்படுமா? அவன் கொடுத்த பணத்தை நான் வாங்க மறுத்துவிட்டேன். 'மரியாதையாக கணக்கை எடுத்துக் கொண்டு வா. நீங்க பண்ணியிருக்கிற கள்ள மார்க்கெட் இருக்கே, அது லேசுப்பட்டதல்ல. உன்னை யும் உன் முதலாளியையும் தூக்கிலே தொங்கவிட எனக்குத் தைரியமுண்டு, தெரியுமா?' அப்படின்னு சொன்னேன். அதுக்கு அவன் என்ன சொன்னுன் தெரியுமா?''

''என்ன சொன்னுன்?''

''கன்னம் சாத்துற இடமும், சாத்தாத இடமும் உனக் குத் தெரியலே. எங்களை யாருன்னு நினைச்சிக்கிட்டிருக்கே? பீடம் தெரியாமல் சாமி ஆடாதே; மரியாதையாகப் பணத்தை வாங்கிக்கொண்டு காரியத்தை முடி. இல்லேன்னு நீதான் தொந்தரவுக்கு ஆளாகப் போறே! அப்படின்னு மிரட் டினுன் ஸார்.''

''அப்புறம்?''

''அப்புறமென்ன? 'அப்பா, இது உங்க வெள்ளைக்கார எசமானேட ராஜ்யமில்லே. இது எங்க ராஜ்யம். இந்த ராஜ்யத்திலே உன்னை லேசிலே விடமாட்டோம். உன்னைக் கம்பி எண்ண வைக்காதபோனு, என் பேரையே மாத்தி வய்யி!' அப்படின்னேன் நான்.''

''அதுக்கு அவன் என்ன சொன்னுன் தெரியுமா? இது அவங்க ராஜ்யம்தானும். அவங்களை ஜெயில்லே அடைக்கிற

திறத்தைப் பார்த்துப்பிடுவாராம்: அது மட்டுமா சொன்னுன்? இந்த மாதிரி நான் நடவடிக்கை எடுக்க நினைக்கிறதைவிட, ஒரு முழக் கயிற்றை எடுத்துத் தூக்குப் போட்டுக்கிட்டுச் சாகலாம், அப்படின்னுன் ஸார். எனக்கா ஸார் ஒரு முழக் கயிற்றுக்குப் பஞ்சம்? நானு கள்ளமார்க்கெட் செய்தேன்? நானு லஞ்சம் கொடுத்தேன். நானு லஞ்சம் வாங்கினேன்? நானு ..''

''சரி, சரி. அப்புறம் சொல்லு'' என்றேன் நான்.

''அப்புறம் என்ன? அவன் வந்த வழியே திரும்பிப் போனுன் ஸார். இரண்டு நாள் கழிச்சி எங்க மேலாபீஸர் என்னைக் கூப்பிட்டுவிட்டார்; அந்த மில் விஷயமாக நான் எடுத்துக்கொண்ட நடவடிக்கையையெல்லாம் விசாரித்தார். சொன்னேன். அதற்கு அவர் என்ன சொன்னுர் தெரியுமா? அந்த நடவடிக்கையை மேலும் தொடராமல் அப்படியே விட்டுவிட வேணுமென்று சொன்னுர். 'அதெப்படி முடியும்?' என்று கேட்டேன் நான். 'முட்டாள்! முட்டாள்! மலையோடே மோதினுல் மண்டைதானே சிதறும்? நீ ஏதாவது மேல் நட வடிக்கை எடுத்தால், உன் வேலைக்கே ஆபத்து' என்று சொன்னுர் அவர். 'கடமையைச் செய்தேன். இதில் எனக்கென்ன பயம்? என்ன ஆபத்து?' அப்படின்னேன். உடனே எனக்கு ஒரு கடிதத்தை எடுத்துக் காட்டினுர் அவர்.

''என்ன கடிதம்?''

''அந்த மில் விஷயத்தில் மேற்கொண்டு நடவடிக்கை எதுவும் எடுக்க வேண்டாம் என்று ஒருவர் எழுதியிருந்தார். அந்த ஒருவரின் கையெழுத்தைப் பார்த்ததுமே எனக்குக் கண்ணே இருண்டு போய்விட்டது, ஸார்.''

''யாரது?''

''யாரா? நீங்களும் நானும் ஓட்டுப் போட்டுத் தேர்ந் தெடுத்து உயர்ந்த பதவிக்கு ஆளாக்கி வைத்திருக்கிறேமே— அப்படிப்பட்ட தேச பக்தர் ஒருவர்தான் ஸார், அதை

எழுதியிருந்தார். அதைப் படித்துவிட்டு ஆபீஸரிடம் திருப்பிக் கொடுத்தேன். 'பார்த்தாயா? நீயும் நானும் என்ன செய்யக் கிடக்கு? வந்ததை வரப்பத்திக்கொண்டு, நாமும் பிழைச்சிப் போறதுதான் மரியாதை. தெரிஞ்சுதா?' அப்டின்னார் ஆபீஸர். ஆனால் எனக்கோ மான உணர்ச்சி நெஞ்சைக் குத்தி வாங்கியது. 'முடியவே முடியாது. நான் நடவடிக்கை எடுக்கத்தான் செய்வேன்' என்றேன். 'நடவடிக்கை அவங்க மேலேயா? இல்லை, உன்மேலேயா? வீணாப் புழைப்புக்கு உலை வச்சிக்கொள்ளாதே. நீ பொண்டாட்டி புள்ளைக்காரன். உனக்கு நல்லதைத்தான் சொல்றேன்' என்றார் ஆபீஸர். 'அதற்காக என் மானத்தை விற்க முடியாது ஸார்' அப்படின்னேன் நான். 'முட்டாள், முட்டாள்! சர்க்காரே அவங்க சர்க்கார்தான். அவங்களோடு மோதிக் கொள்வதைவிட ஒரு முழக்கயிற்றைப் போட்டுத் தூக்குப் போட்டுக்கிட்டுச் சாகலாம். அதற்குமா விதியில்லை? போ, சொன்னபடி செய்' என்று கடுமையாகச் சொன்னார் ஆபீஸர். நீங்களே சொல்லுங்க ஸார். நானா ஒருமுழக் கயிற்றினால் தூக்குப் போடணும்? எனக்கா விதியில்லை? இதோ இருக்குது ஸார் கயிறு! எனக்கா விதியில்லை...?"

அவன் மீண்டும் உணர்ச்சிப் பரவசத்துக்கு ஆளாகிப் பைத்திய நிலைக்கு வந்துவிட்டான். நான் அவன் நிதானம் பெறும் வரையிலும் மௌனமாக இருந்தேன்.

இருள் நன்றாகக் கவிந்துவிட்டது. அணைப்புச் சுவருக்குக் கீழே எதையோ எண்ணி உறுமி உறுமி மோதிக்கொண்டிருக்கும் அலைச் சப்தம் ஒன்றே அங்கு நிலவிய அமைதியைக் குலைத்துக் கொண்டிருந்தது. தூரத்திலே நகருக்குள் பம்பாய் நகரத்தின் ஒளி முட்டம் பளிச்சென்று வான மண்டலத்தில் புரையோடிப் பாய்ந்திருந்தது. இடப்புறத்தில் உள்ள தாஜ் மஹால் ஹோட்டலின் ஜன்னல் கதவுகள் அனைத்தும் ஒளி பெற்று ஆயிரங் கண்கொண்ட அரக்கனைப்போல் உறுத்துப் பார்த்துக்கொண்டிருந்தன. அங்கிருந்து மெல்லிய ஆங்கில

வாத்திய சங்கீதம் மங்கிக் கரைந்து அலை வெள்ளத்தோடு சங்கமித்துக் கொண்டிருந்தது.

நான் ஒரு பெருமூச்செறிந்தவாறே அவன் பக்கம் திரும்பினேன். அவன் தன் கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டே என் பக்கம் திரும்பினான்.

''சரி, அப்புறம்?'

''இரண்டு நாள் கழிந்தது ஸார். நான் பாட்டுக்கு மேல் நடவடிக்கைக்கான காரியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். திடீரென்று எனக்கு ஒரு உத்தரவு வந்தது ஸார். எனக்கு அந்த இடத்திலிருந்து மாற்றுதல் உத்தரவு. இருபத்தி நாலு மணிநேரத்துக்குள் சார்ஜை மாற்றிக் கொடுக்க வேண்டும்; மாற்றுதலான இடத்துக்குப் போய் வேலையும் ஒப்புக் கொள்ள வேண்டும் என்று உத்தரவு வந்தது. உத்தரவுக்குப் பணிந்து அந்த இடத்துக்குப் போனேன். ஆனால் கள்ளமார்க் கெட்காரன் எங்கேதான் ஸார் இல்லை? கடவுள் எங்கும் இருக்கிறார் என்கிறார்கள். ஆனால் நான் கடவுளை எங்குமே காண வில்லை. ஆனால் கள்ளமார்க்கெட்காரனை? நான் மாற்றிப் போன இடத்திலும் இதேமாதிரி ஒரு கேஸ் வந்தது ஸார்.''

''அங்கேயுமா?''

''எங்கேதான் ஸார் இல்லை? அங்கும் நான் என் கடமையைச் செய்தேன். அதற்கு எனக்கு என்ன கிடைத்தது தெரியுமா? எனக்கு 'சஸ்பெண்ட்' உத்தரவு ஸார், சஸ்பெண்ட் உத்தரவு! எனக்கா ஸார் ஒரு முழக் கயிறு இல்லை. இதோ இருக்கிறது, பாருங்கள், இதோ இருக்கிறது!....''

''பிறகு?''

''பிறகா? சஸ்பெண்ட் உத்தரவுக்குப் பணிந்து வேலையில்லாமல் இருந்தேன் ஸார். ஆனால் அத்தோடு நிற்கவில்லை. சஸ்பென்ஷன் காலம் முடிவதற்குள்ளேயே என் வீடு தேடி டிஸ்மிஸ் உத்தரவும் வந்து விட்டது ஸார்!

''டிஸ்மிஸ்ஸுக்கு என்ன காரணம்?''

''காரணமா? என் வேலை திருப்திகரமாக இல்லையாம். அத்துடன் நான் அரசாங்க அலுவலில் இருந்து கொண்டே அரசியலில் பங்கெடுத்துக் கொண்டேனும். யாரோ பேசிய கூட்டத்துக்கு நானும் போயிருந்தேனும். அப்படிப் போகக் கூடாதாம். இதுதான் என்மீது குற்றம்...? நான் செய்தது குற்றமா ?''

மீண்டும் அவன் தன்னிலை யிழந்து புலம்பினுன். நான் ஒன்றுமே பேசவில்லை. எங்கோ தூரத்தில் ஒரு ஆலைச் சங்கு 'நைட் ஷிப்டுக்'காகத் தொழிலாளர்களை அறைகூவி அழைத்தது; இந்தியாவின் தலைவாசல் ஆடாது அசையாது வாய் பிளந்து நின்றது.

அவன் மீண்டும் பேசத் தொடங்கினுன் :

''குழந்தைகுட்டிகாரனுக்கு வேலை போய்விட்டால் பிறகு அவன் என்ன ஸார் செய்வான்? எவ்வளவு நாள்தான் கடன் வாங்கிப் பிழைப்பது ? கடன் கொடுத் தவனிடம் எவ்வளவு நாள்தான் தவணை சொல்வது ? கடன் கொடுத்தவனெல்லாம் என்னைப் பார்த்து என்ன கேட்டான் தெரியுமா? 'வாங்கின கடனைச் சொன்ன தேதியில் திருப்பித் தர வக்கு இல்லேன்னு ஒரு முழக் கயிற் றைக் கட்டித் தொங்கிக் கொண்டு சாகலாமே என்று சொன் ஞர்கள் ஸார். ஒரு முழக் கயிற்றுக்குமா விதியில்லை ? என்று கேட்டான் ஸார், பால்காரன். நீங்களே சொல் லுங்கள் ஸார், எனக்கா ஒரு முழக் கயிறுக்கு விதியில்லை? இதோ இருக்கிறது ஸார். கயிறு! இதோ இருக்கிறது....''

''அப்புறம் எங்குமே வேலை கிடைக்கவில்லையா?''

''வேலையாவது? யோக்கியமானவனுக்கு எவன் வேலை கொடுக்கிறுன் ? தான் செய்யும் அயோக்கியத்தனத் துக்கு எவன் உதவி செய்கிறுனே அவனுக்குத் தான் வேலை. எனக்கு வேலை கிடைக்குமா ஸார்?'' என்று வாய்விட்டுப் புலம்பினுன் அவன்.

"பிறகு? உன் மனைவி? குழந்தைகள்? அவர்கள்—"

"மனைவியாவது, குழந்தையாவது? எல்லாம் இந்த வயிற்றுப் பிரச்சினைக்குப் பிறகுதான் ஸார். என் மனைவி ரொம்ப நல்லவள்தான். ஆனால் அவள்தான் எத்தனை நாளைக்குப் பட்டினி கிடப்பாள்? குழந்தைகள் பசி பசி என்று கதறும்போது அவளுடைய பெற்ற வயிறு கொதிக்காதா? ஒரு நாள் அந்தக் கொதிப்பு என்னையே தகித்து விட்டது ஸார். தகித்து விட்டது. என்னைக் கைப்பிடித்து மணந்த மனைவியே என்னைப் பார்த்துக் கேட்டுவிட்டாள் ஸார், கேட்டுவிட்டாள்! 'நான்தான் சாகிறேன். பிள்ளைகளையும் சாக விடணுமா? கட்டிய மனைவியையும் பெத்தெடுத்த பிள்ளைகளையும் பட்டினி போட்டுப் பார்த்துக் கொண்டிருக்கிறதைவிட, நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம். ஒரு முழக் கயித்துக்குமா விதியத்துப் போச்சு?' அப்படின்னு வாய் துணிஞ்சு கேட்டாள் ஸார். கேட்டே விட்டாள் ஸார்! ......எனக்கா ஒரு முழக் கயிறுக்கு விதியில்லே? எனக்கா விதியில்லே? இதோ இருக்கிறது ஸார் ஒரு முழக் கயிறு!..."

"சரி, பிறகு என்ன செய்தாய்?"

"என்ன செய்தேனா? என்ன செய்வேன்? வீட்டை வீட்டு வெளியேறி எவ்வளவோ நாளாச்சு ஸார், நீங்களே சொல்லுங்கள்! எனக்கா ஒரு முழக் கயிறுக்கு விதியில்லே? இதோ இருக்கிறது. இதோ இருக்கிறது ஸார். நீங்களே சொல்லுங்கள். நானா கள்ள மார்க்கெட்காரனைத் தூக்கில் போட வேண்டும் என்றேன்? நானா கடமையைச் செய்யத் தவறினேன்? நானா கள்ள மார்க்கெட்காரனைத் தப்பவிட்டேன்? நானா சொன்ன சொல்லைத் தவறவிட்டேன்? நானா குழந்தை குட்டிகளைப் பட்டினி போட்டேன்? நானா தேசத் துரோகம் செய்தேன்! நானா மக்களைக் காட்டிக் கொடுத்தேன்? நானா

கள்ளமார்க்கெட் காரனுக்குப் பாதுகாப்புக் கொடுத்தேன்? எனக்கா ஒரு முழக் கயிறுக்கு விதியில்லை? எனக்கா சாவதற்கு விதியில்லை? இருக்கிறது ஸார். இதோ இருக்கிறது.''

அவன் ஆவேசம் அடைந்தவனைப்போல் கத்திக்கொண்டே எழுந்தான். அங்கிருந்து நகரை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

அவன் செல்லும்போது அவன் கையிலே அந்த ஒரு முழக் கயிறு— சுருக்கிட்டுத் தொங்கும் ஒரு முழக் கயிறு—பயங்கரமாக ஊசலாடிக் கொண்டிருந்தது.

நானும் எழுந்து நடந்தேன். என் கண் முன்னால் செவிகளில் 'எனக்கா ஒரு முழக் கயிறுக்குப் பஞ்சம்?' என்ற அவனது சொற்கள் திரும்பத் திரும்ப ஒலித்துக்கொண்டே இருந்தன...

கடற்கரை உப்புக் காற்று என் உடல் புழுக்கத்தைத் தணித்துவிட்டது. ஆனால் அவன் என் உள்ளத்திலே ஏற்றிவிட்ட புழுக்கம்—அது இன்னும் தணியவில்லை; தணியவே இல்லை!

—1951

# இழி தொழில்

## 1

கூடுகு பொரிந்து அடங்குவதுபோல் கைதட்டல் கலகலத்து ஓய்ந்தது.

நகரக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசியும், ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினரும், நகரசபைத் தலைவரும், பிரபல மொத்த ஜவுளி வியாபாரியும், முன்னாள் நீதிக் கட்சிப் பிரமுகரும், இந்நாள் சிவனடியார் திருச்சபையின் போஷகருமான திருவாளர் தில்லைத் தாண்டவராய பிள்ளையவர்கள் பெருமிதத்தோடு எழுந்திருந்து தொண்டையை லேசாகக் கனைத்துச் செருமிக் கொண்டு திருவாய் மலரத் தொடங்கினார் :

''தேச பக்தத் தியாகிகளே, ஊழியர்களே! இன்றைய அவசரக் கூட்டத்தின் காரணம் உங்களுக்குத் தெரிந்ததே. நமது நகரத்தின் தோட்டித் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தால் ஏற்பட்டுள்ள நெருக்கடியான நிலைமையைப் பற்றி ஆலோசிக்கவே நாம் கூடியிருக்கிறோம். நமக்குள்ள செல்வாக்கையும் பலத்தையும் கண்டு பொறாமை கொண்டுள்ள எதிர்க் கட்சிக்காரர்கள்தாம் இந்த வேலை நிறுத்தத்தைத் தூண்டிவிட்டு நமக்கும் பொது மக்களுக்கும் பெருங் கஷ்டத்தை உண்டு பண்ணியிருக்கிறார்கள். தொழிலாளரின் கோரிக்கைகள் நியாயமானவையாயிருந்தால், அரிஜன சேவை

யில் தலைசிறந்த நாம் அவற்றை உடனே ஏற்று ஆவன செய்யப் பின்வாங்க மாட்டோம். ஆனால் அந்தக் கோரிக்கைகள் அனைத்தும் அநியாயமானவை. எனவே தான் துர்ப்போதனையால் கெட்டுச் சீரழியும் தோட்டித் தொழிலாளருக்கும், அவர்களைத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்க்கும் எதிர்க்கட்சியாளருக்கும் நாம் சரியான பாடம் கற்பித்தாக வேண்டியிருக்கிறது. நமது அரும் பெருந் தலைவரான மகான் மகாத்மா காந்திஜி அவர்கள் தாம் ஒரு பதவியை ஏற்க நேர்ந்தால் ஒரு நகரசபைக் கவுன்சிலர் பதவியையே ஏற்பேன் என்று கூறியுள்ளார். ஏன் தெரியுமா? நகரத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்வதே கவுன்சிலரின் முக்கிய வேலை என்பதே அதன் பொருள். அதுமட்டுமல்ல. அவர் தமது நிர்மாணத் திட்டத்திலும் நகர சுத்தியை ஒரு பிரதான கருமமாகச் சுட்டிக் காட்டியிருக்கிறார். நாம்தான் துரதிருஷ்ட வசமாக அவரது பொன்மொழிகளை யெல்லாம் மறந்து விட்டோம். காந்தியடிகளின் போதனையை நாம் நடை முறையில் கடைப்பிடிக்க, இந்தத் தோட்டித் தொழிலாளரின் வேலைநிறுத்தம் நல்ல சந்தர்ப்பத்தைத் தேடித் தந்திருக்கிறது. இதை நாம் நழுவவிடக்கூடாது. தோட்டித் தொழிலை இழிவானதென்றோ, கேவலமானதென்றோ நாம் கருதக்கூடாது. எந்தத் தொழிலுமே உலகில் இழிவானதல்ல. இதை நாம் நன்குணர்ந்து, பொதுமக்களின் கஷ்டத்தையும், காந்தியடிகளின் உபதேசத்தையும் கருத்தில் கொண்டு, நாமே இந்த நகரத்தைச் சுத்தி செய்யவேண்டும். நாளைக் காலையிலேயே இந்தப் புனிதமான பணியை, பொது ஜன நன்மைக்கான போராட்டத்தை நாம் தொடங்கியாக வேண்டும். போராட்டத்தில் நாம் எல்லோரும் பங்கெடுக்க வேண்டும். நீங்கள் அனைவரும் உங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டும்......"

சொல்லின் செல்வரான தில்லைத் தாண்டவராயரின் தர்க்க நியாயம் நிறைந்தஅறைகூவலைக் கேட்டு வந்திருந்தவர்களில் பலரும் தவிர்க்க முடியாத சேவா வைராக்கிய

உணர்ச்சி வசப்பட்டுத் தத்தளித்தார்கள். பல ஊழியர்கள் அந்த இடத்திலேயே தமது பெயரைப் பதிவு செய்துகொள்ள முன்வந்தனர். வேறு சிலர் பின்னர் வந்து பதிவு செய்து கொள்வதாகக் கூறித் தப்பித்துக் கொண்டார்கள். செய லுள்ள வியாபாரிகளான உள்ளூர்க் காங்கிரஸ் பிரமுகர்கள் தாம் போராட்டத்தில் நேரடியாகப் பங்கு கொள்ள இயலா விட்டாலும், போராட்டத்துக்குத் தமது ஆத்மீக ஆதரவும் ஒத்துழைப்பும் பரிபூரணமாக உண்டு என்ற ஒளிவு மறை வற்ற உண்மையைத் தெரிவித்து மகிழ்ந்து கொண்டார்கள். அத்துடன் போராட்ட வீரர்களுக்குப் புதிய வாளிகளும், விளக்குமாறுகளும், அகப்பைகளும், இலவசமாக 'சப்ளை' செய்யும் தளவாட தான கைங்கரியப் பொறுப்பையும் மனமுவந்து ஏற்றுக் கொண்டார்கள்.

நகரசபைத் தலைவருக்குப் பரம திருப்தி. காந்தியடி களின்மீது ஆணையிட்டு, எல்லோரும் கடமையை நிறைவேற்ற முன்வர வேண்டும் என்று இறுதியாகக் கேட்டுக் கொண் டார்.

கூட்டம் கலைந்தது.

காரியாலயத்தை விட்டு வெளியே வந்த ஊழியர்கள் பலர் அந்தப் புனிதப் போராட்டத்தைப் பற்றிய தமது கருத் துக்களைப் பரிமாறிக் கொண்டார்கள்.

"சேர்மன் ஐயாவின் தேச பக்தியைப் பார்த்தீங் களா? அவரைப் பத்தி என்னென்னமோ சொன் னீங்களே!"

"எல்லாம் அவர் மானத்தைக் காப்பாத்திக்கிறதுக்குத் தானே!"

"அட சரிதாம்'யா! தேசெழுகப் பேசினா மட்டும் போதுமா? எலெக்சன் டயத்திலே அவர் பண்ணின அட்டகாசமும் தில்லுமில்லும் நமக்குத் தெரியாதா? இதுவும் அந்த மாதிரி ஒண்ணு தான்."

"இதிலென்னய்யா தில்லுமில்லு?"

"பின்னே? தோட்டித் தொழிலாளியின் வயித்தெரிச்சலைக் கொட்டிக்கிடுறதிலே நமக்கு வேறே பங்கா?"

"அதுக்காக, அந்தப் பயலுஹ ஊரை நாறவிடலாமாக்கும்!"

"நகர சபைக்குள்ளே இருக்கிற நாத்தத்தை விடவா?"

"அது சரிதான்'வே. அவனுக ஊரை நாறவிட்ட பிறகு தானே உமக்கும் நமக்கும் அவனைப்பத்தியே நினைப்பு வருது? இல்லேன்னு வருமா? ஹரிஜன சேவை சேவை என்கிறோமே. ஒரு வாரத்துக்கு மின்னே வரையிலும் அவங்க நிலைமை என்னங்கிறதைப்பத்தி, நாமயாராவது கவலைப்பட்டதுண்டா? தெரிஞ்சிக்கிட்டதுண்டா?"

"வேய், இப்போ ஊர் நன்மையும், காங்கிரஸின் கௌரவமும்தான் பெரிசு. நாளைக்கு நாம் இதிலே கலந்துக் கிடத்தான் வேணும்!"

"அதென்னமோ ஐயா. நான் புள்ளை குட்டிக்காரன். அந்தப் பயலுஹ வாயெரிஞ்சி வயிறெரிஞ்சி வாரித் தூத்தினு, அந்தப் பாவம் நம்மை லேசிலே விடாது. நான் இந்த விவகாரத்திலே தலைகுடுக்கப் போறதில்லை."

"நீர் வரலேன்னு, வேலை நின்னுடப் போறதாக்கும்!"

"இல்லை—நீங்க செய்ற வேலையைத்தான் ஊர் மெச்சப் போவுது!"

.........அந்த ஊழியர்களிடையே நிலவிய அபிப்பிராய பேதங்கள் முடிவேயில்லாத வாதப் பிரதிவாதங்களாக மாறி, கூச்சலாகப் பரிணமித்து, பதில் காணமுடியாது தவித்தன.

## 2

இன்ருேடு ஏழு நாட்கள் ஆகின்றன.

நகரசுத்தித் தொழிலாளரின் வேலைநிறுத்தம் இன்றும் முடிவு காணும் நிலையிலில்லை. நகரசபை நிர்வாகிகளும் தொழிலாளரின் கோரிக்கைக்கு இணங்கவில்லை. தொழிலாளர்களும் வணங்கிவிடவில்லை. எனவே வேலைநிறுத்தம் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது.

ஏழு நாட்கள் !

நகரத்தின் நிலைமையோ சொல்லும் தரமன்று. வீடுகளில் சுத்தம் செய்ய ஆள் கிடையாது. ஊர்ச் சாக்கடைகள் அனைத்தும் கட்டுக்கிடையாகித் தேங்கிப் பெருகிப் பெருகி அணை கடந்து தெருக்களிலே போக்கிடம் தேடத் தொடங்கின. தெருக்கள் அனைத்தும் குப்பையும் கூளமும் மண்டிக் கிடந்தன. எங்கும் துர்நாற்றம் பரவி நின்றது. ஜனங்கள் மூச்சுவிடத் திணறினர்கள்; சாப்பிடத் திணறினர்கள்; நடக்கத் திணறினர்கள்.

நகரம் நரகமாயிற்று.

"இந்தத் தோட்டிப்பய சென்மங்களுக்கு வந்த திமிரைப் பார்த்திங்களா?" என்று கறுவினர்கள் சிலர்

"அவன் மட்டும் மனுசனில்லையா? அவனுக்கும் வாயும் வயிறும் இல்லாமலா போச்சி!" என்று அனுதாபப்பட்டார்கள் வேறு சிலர்.

'இந்தப் பாச்சாவெல்லாம் நம்ம சேர்மன் பிள்ளைவாளிடம் பலிக்காது!" என்று ஜம்பம் பேசினர்கள் சிலர்.

"எந்தப் பூச்சாண்டியும் தொழிலாளியிடம் பலிக்காது!" என்று எதிரொலி கிளப்பினர்கள் வேறு சிலர்.

வேலைநிறுத்தத்தைப்பற்றி ஜனங்கள் பல்வேறு விதமாகப் பேசிக்கொண்ட போதிலும், அந்த வேலைநிறுத்தம் சகல மக்களின் கவனத்தையும் கவர்ந்திருந்தது என்பதில் மட்டும் எந்தவித அபிப்பிராய பேதத்துக்கும் இடமில்லை.

திருவாளர் தில்லைத் தாண்டவராயன் சொல்கிறபடி அந்த வேலை நிறுத்தம் தூண்டுதலால் ஏற்பட்டதுதான். ஆனால் தூண்டிவிட்டது எதிர்க் கட்சிக்காரர்களோ, பொறுமைக்காரர்களோ அல்ல. தூண்டிவிட்டது அந்தத் தொழிலாளிகளின் துயரம், பசி, பட்டினி, மிருக வாழ்க்கை, வறுமைக் கொடுமை முதலியவைதாம்...

நகரசுத்தித் தொழிலாளரின் வாழ்க்கை நிலை அவ்வளவு படுமோசமான நிலைமையிலிருந்தது. அவர்களுக்கு நல்ல குடியிருப்பு கிடையாது. ஊர் எல்லையிலுள்ள நத்தம் புறம்போக்கு நிலத்தில் கோழிக்கூடுகளைப் போலவுள்ள குடிசைகள் தாம் அவர்களின் வாசஸ்தலங்கள். அங்குள்ள பன்றிகளோடும் நாய்களோடும் அவர்களும் அந்தக் கூடுகளில் வாழ்ந்தார்கள். அந்தக் குடியிருப்புக்குத் தண்ணீர் வசதி கிடையாது; விளக்கு வசதி கிடையாது. குடியிருப்புக்குப் பின்புறம் ஓடும் வயற்காட்டுச் சிற்றோடைதான் அவர்களின் அமுத கங்கை; நிலவின் கருணையுள்ள நாட்கள்தான் அந்தக் குடியிருப்பு ஒளி பெறும் நாட்கள். அந்தக் கோழிக் கூடுகளில்தான் அவர்கள் பிறந்தார்கள்; வளர்ந்தார்கள்; காதலித்தார்கள்; கலியாணம் செய்தார்கள்; பிரசவித்தார்கள்; பிள்ளை பெற்றார்கள்; பேரன் பேத்தி எடுத்தார்கள்; பிணமாகிச் செத்தார்கள். அந்தத் தொழிலாளிகளுக்குக் கிடைத்துவந்த சம்பளமோ மாசம் பதினைந்து ரூபாய். பஞ்சப்படி உண்டு. அந்தப் 'படி'யோ பஞ்சப்படி என்ற பெயருக்கே இலக்கணமாய் அமைந்திருந்தது இந்தக் 'குபேர' சம்பத்தில்தான் அவர்கள் உயிர் சுமந்து திரிந்தார்கள். வருகிற சம்பளம் வயிற்றுக்குக் காணாமல் தவணை வட்டிக்காரனிடம் கடன் வாங்கினார்கள்; வாங்கிய கடனைக் கொடுக்க முடியாமல் வட்டிக்காரனிடம்

அவஸ்தைப் பட்டார்கள்; அடிபட்டார்கள்; சட்டிபானைகளைப் பறிகொடுத்தார்கள்; மானம் மரியாதையைப் பறிகொடுத்தார்கள்......

அந்தத் தொழிலாளர்களின் வாழ்க்கை வசதிக்கு நகரசபை எந்தவித முயற்சியும் செய்யவில்லை. லோக்கல் போர்டு சிப்பந்திகள் என்ற பெத்தப் பெயரே தவிர, அவர்களுக்கு வேலை நிரந்தர உத்தரவாதமோ, பாதுகாப்பு நிதி வசதியோ, சம்பள உயர்வோ—எதுவும் கிடையாது. எனவே இந்த நிலையில் நகரசபை உத்தியோகஸ்தர்களுக்கு அவ்வப்போது எழும் விருப்பு வெறுப்புக்களுக்காளாகி, சிலருக்குச் சீட்டுக் கிழிவதும் உண்டு. நகரசபையினர் அவர்களுக்கு வஸ்திர தானம் செய்து புண்ணியம் சம்பாதிப்பது என்னவோ மறுக்க முடியாத உண்மைதான். எனினும் அந்த வஸ்திரங்களோ ஆளுக்கு ஒரு ஜோடி; அதுவும் மாமாங்கத்துக்கு மாமாங்கம்.

சுருங்கச் சொன்னால் நகரத்தை நரகமாக்காமல் சுத்தம் செய்து அழகுபடுத்தும் அந்தத் தொழிலாளர்கள் மட்டும் நரகக் குழியிலேதான் வாழ்ந்து வந்தார்கள்.

இந்த நிலைமைகளைச் சமாளிக்க முடியாதபோதுதான், அந்தத் தொழிலாளர்கள் தங்கள் ஒற்றுமையின் பலத்தை, தமது உழைப்பின் சக்தியை உணர்ந்தார்கள்; ஒன்றுபட்டு நின்று உரிமைக்காகப் போராடினார்கள். பஞ்சப்படி, சம்பள உயர்வு, புதிய உடை, வேலை நிரந்தரம், குடியிருப்பு வசதி, நீக்கப்பட்ட தொழிலாளரை மீண்டும் வேலைக்கு எடுத்தல் முதலிய கோரிக்கைகளுக்காக, நகரசபை நிர்வாகிகளோடும் லேபர் அதிகாரிகளோடும் வாய் சலிக்குமட்டும் பேச்சு வார்த்தை நடத்திப் பார்த்தார்கள், அவற்றால் எந்தவிதப் பயனும் விளையவில்லை. எனவேதான் அவர்கள் தங்களுக்குத் தெரிந்த, தங்களிடமுள்ள ஒரே ஆயுதத்தை—இறுதி ஆயுதத்தைப் பிரயோகிக்கத் துணிந்தார்கள்.

வேலை நிறுத்தம்!

கடந்த ஒரு வார காலமாக, ஆண் பெண் உட்பட எல்லாத் தொழிலாளரும் வேலை நிறுத்தம் செய்தார்கள். ஒரு குஞ்சு குளுவான்கூட, வேலைக்குச் செல்லவில்லை. வேலை நிறுத்தம் தொடங்கிய பிறகுதான் நகரசபை நிர்வாகிகளுக்கும் அதன் பலம், பலன் எல்லாம் தெரிந்தன. நியதி தவறாது சுற்றிச் சுற்றிவரும் பிரபஞ்ச கோளமே திடீரென்று ஸ்தம்பித்துச் சிந்திச் சிதறிப் போவதுபோல் நகரத்தின் நிலை நியதி குலைந்து தத்தளித்தது. எனினும் நிர்வாகிகள் தொழிலாளரின் கோரிக்கைக்கு இணங்க முன்வரவில்லை; உள்ளூர் அரசியல் பிரமுகர்கள் பலரும் வேலை நிறுத்தத்தை உடைக்கச் செய்த சதிவேலைகள் எதுவும் பலிக்கவில்லை. சுதந்திரத்தின் பாது காவலர்களான அந்தப் பிரமுகர்கள் போலீஸின் மறைமுகமான ஒத்துழைப்பைச் சம்பாதித்துக் கொண்டு, தமது அடியாட்களையும் குண்டர்களையும் ஏவிவிட்டு நகரசுத்தித் தொழிலாளரைக் கண்ட கண்ட இடத்தில் தாக்கினார்கள்; குடியிருப்புக்குள் நுழைந்து சட்டிபெட்டிகளை உடைத்தெறிந்தார்கள்; பெண்களையும் பிள்ளைகளையும் சீரழித்தார்கள். போலீசாரும் 'அமைதியை நிலைநாட்டும்' கடமை யுணர்ச்சியோடு தொழிலாளர்மீது கண்டும் காணாமலும் தடியடித் தாக்குதல் நடத்தினர்; 'அமைதிக்குப் பங்கம் விளைவித்த' தொழிலாளரை லாக்கப்பில் தள்ளினார்கள்.

அடக்குமுறை—சூழ்ச்சி—அரசியல் சாகசம் எதுவும் அந்தத் தொழிலாளரை அடக்கிவிடவில்லை. அவர்கள் எதற்கும் அஞ்சவில்லை; அடி பணியவில்லை. உலைக்களத்திலே தள்ளிய காலத்திலும் அவர்கள் உறுதி குலையவில்லை. அதற்குப் பதிலாக அவர்கள் உருக்காகிக் கொண்டிருந்தார்கள். அது மட்டுமல்ல. அந்தத் தொழிலாளரின் உரிமைப் போராட்டம் பிற பகுதித் தொழிலாளர்களின் கவனத்தையும் கவர்ந்தது. நகரசுத்தித் தொழிலாளருக்கு ஆதரவாக பிற தொழிலாளர்கள் கூட்டங்கள் நடத்தினர்; ஊர்வலம் நடத்தினர்; கோஷமிட்டனர்; தீர்மானங்கள் நிறைவேற்றினர்; ஆதரவு திரட்டினர்......

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அந்த வேலை நிறுத்தப் போராட்டத்தைச் சீர்குலைத்துச் சின்னுபின்னமாக்கக் கனவு காணும் 'புனிதப் போராட்ட'த் திட்டம் நகரக் காங்கிரஸ் கமிட்டி காரியாலயத்தில் திருவாளர் தில்லைத் தாண்டவராயரின் தலைமையில் உருவாகியது...

## 3

**பறையருக்கும் இங்குதீயர்**
**புலையருக்கும் விடுதலை!**
**பறவரோடு குறவருக்கும்**
**மறவருக்கும் விடுதலை!**

என்று பாடிக் கொண்டே அருணோதயப் பொழுதில் நகரை வலம் வரத் தொடங்கியது அந்த ஊர்வலம்.

கதர்க் குல்லாய், கதர் ஜிப்பா, கதர் பைஜாமா முதலிய தூய வெள்ளை ஆடையலங்காராதிகளோடு, புத்தம்புதிய வாளிகளையும், அகப்பைகளையும், விளக்குமாறுகளையும் ஏந்திய திருக்கரங்களோடு, சில காங்கிரஸ் ஊழியர்கள் அணிவகுத்துச் சென்றார்கள். வீறுநடை போட்டுச் செல்லும் அந்த ஊழியர்களுக்கு முன்னால் வெற்றி நடைபோட்டுச் சென்று கொண்டிருந்தார் சேர்மன் பிள்ளையவர்கள். அந்தக் கர்மயோக சாதகர்களின் அணிவகுப்புக்கு இருமருங்கிலும் போலீஸ் ஜவான்கள் சிலர் பாதுகாப்பாக நடந்து வந்தனர். அந்த ஊர்வலத்துக்குப் பின்னால், சுமார் ஐம்பது கஜ தூரத்துக்கு அப்பால், எழுந்திருத்தாகிச் செல்லும் உற்சவ மூர்த்தத்துக்குப் பின்னால் தேவாரம் பாடிவரும் திருக்கோஷ்டியைப் போல், ஆயுதம் தாங்கிய போலீஸாரைத் தாங்கிய லாரி ஒன்று மெல்ல மெல்ல வந்து கொண்டிருந்தது.

ஊர்வலம் முதல் பெரு வீதியைக் கடந்து மூலை திரும்பியது.......

எதிரே நகரசுத்தித் தொழிலாளர்களின் ஊர்வலம் கட்டவிழ்த்துவிட்ட அசுரசக்தியைப் போல் உருண்டு திரண்டு அலைமோதி வந்து கொண்டிருந்தது.

"மகாத்மா காந்திக்கு—ஜே!" என்று கோஷித்தது தில்லைத் தாண்டவராயரின் ஊர்வலம்.

"உழைப்பவன் சோற்றைப் பறிக்காதே!" என்று எதிரொலி தந்தது நகரசுத்தித் தொழிலாளரின் ஊர்வலம்.

சிறிது நேரத்தில் இரு ஊர்வலங்களும் எதிரும்புதிருமாக, இரு பெரும் படைகள்போல் நெருங்கின; ஒன்றையொன்று வழி மறித்தன; இரண்டும் முன்னேற முடியாமல் ஸ்தம் பித்து நின்றன.

"வழி விடுகிறீர்களா, இல்லையா?" என்று கர்ஜனை செய்தார் தேசபக்த ராஜசிம்மம் தில்லைத் தாண்டவராயர்.

"முடியாது! என் சவத்தின்மீது நடந்து போங்கள்!" என்று முன்னே வந்து முழக்கினான் ஒரு வயோதிகத் தொழிலாளி.

அந்தக் கிழட்டு உடம்பு படபடத்தது; நரம்புகள் புடைத்துத் துடித்தன.

சேர்மன் பிள்ளையவர்கள் போலீஸ் உதவியை அழைப் பதா வேண்டாமா என்று யோசித்தார்; அவருக்குப் பின்னால் திரண்டு நின்ற ஊழியர்கள் எதிரே ஏறிட்டுப் பார்த்தார்கள்.

எதிரே......

தாடி மண்டி வளர்ந்த முகங்கள்—பசியும் களைப்பும் பதிந்து, களையும் ஒளியும் இழந்து, பஞ்சடைந்து தோன்றும் கண்கள்—ஒட்டி உலர்ந்து உட்குழிந்த வயிறுகள்—குழலாடித் தளர்ந்துபோன வயோதிகர்கள்—வாலிப வயதிலேயே வயோ திகத்தை அனுபவிக்கும் குமரர்கள்—மானத்தை மறைக்கக்

கூடப் போதுமான கந்தலற்றுத் தவிக்கின்ற பெண்கள்—பிஞ்சிலே வெம்பிய பழம்போன்று வற்றி மெலிந்து தோன்றும் சிறுவர் சிறுமிகள்......

அவர்கள் அத்தனை பேரும் ஆண் பெண் என்ற வித்தியாசமின்றி, சிறியவர் பெரியவர் என்ற பாகுபாடின்றி, ஒரே விதமான உறுதியோடும் உத்வேக உணர்ச்சியோடும் நின்று கொண்டிருந்தனர்.

முன் வரிசையில் நின்ற காங்கிரஸ் ஊழியன் ஒருவன் அந்தக் கிழவனை நோக்கிக் கேட்டான் :

"எங்களை ஏன் வழி மறிக்கிறாய்? உங்கள் வேலை நிறுத்தத்தால் ஊரே நாற்றமெடுத்துப் போச்சே! ஏன் இந்த அடாத காரியம் செய்கிறீர்கள்?"

அந்தக் கிழவனிடமிருந்து கணீரென்று பதில் வந்தது.

" அடாத காரியமா ? எதய்யா அடாத காரியம்? அந்தக் காந்தி மகாத்துமா சொல்லிக் கொடுத்த சக்தியாக்கிரகத்தைத்தானே நாங்களும் செய்கிறோம்!"

"நாங்கள் செய்த சத்யாக்ரகம் அன்னியனின் அநீதியை, ஆட்சியை எதிர்த்து ; நீங்கள் செய்வது சத்யாக்கிரகமல்ல; சண்டித்தனம் !"

"ஏனையா? நீங்க செய்தா சத்யாக்ரகம், நாங்க செய்தா சண்டித்தனம் ! அப்படித் தானய்யா? நாங்களும் எங்களுக்குச் செய்த அநியாயத்தை எதுத்துத்தான் போராடுதோம். தெரிஞ்சிதா ?"

" உன்னிடம் வாதாட வரவில்லை. சரி, வழியை விடு!"

"இருங்க. சாமி! காந்தி மகான் உங்களை இப்படித்தான் சேவை செய்யச் சொன்னாரா?" என்று எரிச்சலோடும் கும்பிக் கொதிப்போடும் கேட்டான் கிழவன்.

"ஆமா நகரத்தைச் சுத்தி செய்வது அவர் இட்ட கட்டளை!"

கிழவனுக்கு மீசை துடித்தது; உதடுகள் நடுங்கின; தொளதொளத்த தசை நார்களெல்லாம் முறுக்கேறித் திமிறுவதுபோல் தோன்றின. புடைத்துத் தெரியும் ரத்த நாளங்களும், நரம்புக் கொடிகளும் நெளிந்து புரண்டன......

"இதோ பாருங்கையா! எங்க கூட்டத்தை! உழைக்கிற உழைப்புக்குக் கிடைக்கிற காசு ஒரு வாய்ச் சோத்துக்குப் பத்தலெ. எலும்பும் தோலுமா நிக்கிற எங்க குழந்தை குட்டிகளைப் பாருங்க. கட்டையிலே போற வயசிலேகூட வயித் தாத்திரம் தாங்க முடியாமெ, உழைச்சி உழைச்சித் தேஞ்ச இந்த உடம்பைப்பாருங்க. எங்க இத்தனை பேர் வயித்திலேயும் மண்ணடிச்சிட்டுத் தான் காந்தி மகான் ஊரைச் சுத்தம் பண்ணச் சொன்னாரா? எங்களுக்கு எதிரா, கருங்காலி வேலை பாக்கிறதுக்குத்தான் காந்தி சொல்லிக் கொடுத்தாரா? நெஞ்சிலே கையை வைத்து நிசத்தைச் சொல்லுங்கய்யா!..."

கிழவனின் குரல் உணர்ச்சிப் பெருக்கால் உச்சஸ்தாயிக்கு ஏறிக் குழகுழத்துத் தடுமாறியது.

"இவனோடே என்னப்பா பேச்சு?" என்று வெட்டி முறித்துப் பேசிவிட்டு, அருகே நின்ற போலீஸ் ஜவான்களைக் கண் காட்டியவாறு, 'ஊம்' என்று பத்திரம் காட்டி உறுமினார் திருவாளர் தில்லைத் தாண்டவராயர்.

மறுகணமே போலீஸ்காரர்கள் தொழிலாளர் அணி வகுப்பின்மீது தங்கள் கை வரிசையைக் காட்டத் தொடங்கினர். திடீரென்று அந்தக் கூட்டத்திலிருந்து கூச்சலும், வசவுகளும், கூக்குரலும் கேட்கத் தொடங்கின. அந்த அணிவகுப்பின் முன் வரிசையில் நின்ற அந்தக் கிழவன் மூக்கிலிருந்து வழியும் ரத்தத்தோடு "ஐயோ!" என்று கூவிக்கொண்டு, பாதையின் குறுக்கே பேச்சு மூச்சற்று விழுந்தான். பெண்

களும் குழந்தைகளும் அடிகளைத் தாங்கமாட்டாமல் அலறிக் கொண்டு ஓடினார்கள்; மண்டையிலிருந்து தெறித்துப் பாயும் ரத்தத்தோடு பல தொழிலாளர்கள் அடிகளைத் தாங்கிக் கொண்டு கீழே விழுந்தார்கள்; அந்தத் தொழிலாளர்கள் ஏந்தி வந்த தொழிற்சங்கப் பதாகை முறிந்து கீழே விழுந்தது. காயம்பட்டுக் கிடந்த அந்தக் கிழவனின் கடைவாயிலிருந்து ஒழுகிய செங்குருதி அந்தப் பதாகையை நனைத்து நனைத்து அதை மேலும் சிவப்பாக்கிக்கொண்டிருந்தது.

சில நிமிஷ நேரத்துக்குள் போலீஸார் அங்கு 'அமைதியை நிலை நாட்டினார்கள்!' தாக்குதலை நடத்தி முடித்த போலீஸார் சேர்மன் பிள்ளைவாளைப் பார்த்துப் புன்னகை செய்தார்கள்; சேர்மன் பிள்ளைவாளும் வெற்றிக் களிப்புத் துள்ளாடும் திருமுக விலாசத்தோடு குறுநகை பூத்தார்.

அவர்களுக்கு முன்னால் அந்தப் போர்க்கள அலங்கோலம் செக்கச் சிவந்து தோன்றியது.

சேர்மன் பிள்ளைவாள் திருவாளர் தில்லைத் தாண்டவராயர் கம்பீரமான குரலில் தம் சகாக்களை நோக்கி ஆணையிட்டார்:

"ம்-செல்லுங்கள் முன்னே!"

திடீரென்று எழுந்த அந்த ஆணைச்சொல் அங்கு நிலவிய அந்தச் சுடுகாட்டு அமைதியைப் பிளந்து கொண்டு எதிரொலித்தது. அந்த எதிரொலியில் தாக்குண்ட முன்னணியில் நின்ற அந்த ஊழியன் தனது வலது காலைத் தன்னையுமறியாமல் விறுட்டென்று எட்டு எடுத்து முன் வைத்தான். ஆனால் அந்தக் காலைப் பதித்ததுமே ஏற்பட்ட உணர்ச்சி, அவன் உடம்பில் மின்சாரத் தாக்குதலின் அக்கினி வேகத்தைப்போல் தாக்கி அந்தக் காலை உதறியெறிந்தது. அவனது காலில் நழுக்கென்று மிதிபட்டு வழுக்கியது அந்தக் கிழவனின் உயிரற்ற சடலம்?

அதைக் கண்டதுமே அவன் கண்களும் மனமும் சுளுக்கிச் சுண்டுவது போலிருந்தன. 'என் சவத்தின் மீது நடந்து

போங்கள்!' என்ற அந்தக் கிழவனின் வார்த்தைகள் கணீ ரென்று ஒலிப்பது போலிருந்தன.

அவன் கால்கள் இடம் பெயர மறுத்தன.

"என்ன தயக்கம்? போங்கள் முன்னே!" என்று திரு வாளரின் ஆணை முழக்கம் மீண்டும் ஒலித்தது.

"முடியாது!" என்று அந்த ஊழியனிடமிருந்து கணீ ரென்று எதிரொலி கிளம்பியது.

"முடியாதா? ஏன் முடியாது?" என்று உறுமினார் சேர்மன்.

"இந்த இழிந்த தொழிலை என்னால் செய்ய முடியாது!"

"எது இழிந்த தொழில்? எந்தத் தொழிலும் இழிவான தில்லை என்று காந்தியடிகள் சொல்லவில்லையா? அதற்குள் ளாகவா மறந்துவிட்டீர்கள்?"

"நாங்கள் மறக்கவில்லை. ஆனால் கருங்காலித் தொழில் செய்வது ஒன்றுதான் உலகத்தில் மிகவும் கேவலமான, இழிவான தொழில் என்பதையும் மகாத்மா சொல்லிக் கொடுத்திருக்கிறார்"

மறுகணமே அந்த ஊழியன் தன் கையிலிருந்த வாளியை யும் அகப்பையையும் கைவிட்டு இறக்கிக் கீழே வைத்தான்.

"நீங்கள் போகப் போகிறீர்களா, இல்லையா?" என்று இடிக் குரலில் கர்ஜித்தார் தில்லைத் தாண்டவராயர்.

அவர்கள் அனைவரும் உடனே போகத்தான் செய்தார்கள்.

ஆனால், முன்னணியில் நின்ற அந்தக் காங்கிரஸ் ஊழியனைப் பின்பற்றி, தம் கைகளிலிருந்த வாளி, அகப்பை, விளக்குமாறு முதலியனவற்றைக் கீழே வைத்து விட்டுத்தான் போனார்கள்!

—1952

———

# ஐந்து ஏக்கர் நிலம்

## 1

''ஏலே, இங்கே வா இப்படி.''

அந்தக் கடுகடுத்த குரல் காதில் விழுந்ததுமே, சங்கரன் நடுநடுங்கிப் போனான். அப்பாவுக்குத் தெரியாமல், இருளோடு இருளாய் நழுவி மாடிக்குப் போய்விட வேண்டுமென்றுதான் அவன் கூடத்து விளக்கைக்கூடப் போடாமல் பதுங்கிப் பதுங்கிச் சென்றான்; ஆனால் அந்தக் கழுகுக் கண்கள் அவனைக் கொத்திப் பிடித்துவிட்டன.

அப்போது மணி பதினொன்றுக்குக் குறைவிராது என்று அவனுக்கு நிச்சயமாய்த் தெரியும். இருந்தாலும் அன்று அப்பாவின் குரலில், வழக்கத்துக்கு மீறிய கனமும் அழுத்தமும் தொனித்ததால் 'என்னமோ ஏதோ' என்று சங்கரன் உள்ளுக்குள் குறுகத்தான் செய்தான்.

''இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தே?''

அவரது குரலில் குழைவு என்பதே இல்லை; வெறும் வறட்டுக் கடுகடுப்பு. சங்கரன் பதில் சொல்லத் தயங்கினான்.

''சொல்லேம்'லே! வாயிலே என்ன கொழக்கட்டையா வச்சிருக்கே?''

''எங்கேயும் போகலே. பெரிய கோயிலுக்குச் சாமி கும்பிடப் போயிருந்தேன்.''

சங்கரன் துணிந்துதான் பொய் சொன்ஞன். சாமி பார்க்கப் போனதாகச் சொன்ஞல், அப்பாவின் தெய்வ பக்தி தன் குற்றத்தைப் பொருட்படுத்தாது மன்னித்து விடக்கூடும் என்றே எதிர் பார்த்தான்.

"ஏமிலே பொய் சொல்லுதே? மாஞேம்புப் பொட்டல்'லே, துரைகள் மகாத்மாவைப் பத்தி வீசி விளாசிப் பொரியாப் பொரிஞ்சு தள்ளினது. எனக்குத் தெரியாதின்னு நினைச்சியா? ஹூம்!" என்று மீசை துடிக்க இரைந்தார் அப்பா.

"இல்லே, வந்து......"

"வந்தாவது போயாவது? முதுகுத்தோலை உரிச்சி உப்பை வச்சிடுவேன். ஊரிலே இருக்கிற வக்கத்த பயலுக எல்லாம் ஒண்ணு சேந்துக்கிட்டு, காங்கிரஸ்'ம்பான், காந்தி'ம்பான்; ஒனக்கு எதுக்குலே இந்த வம்பெல்லாம்?"

"நான் அங்கே போகலை!"

"இன்னமா'லே எத்துதே? ஐயா பிரசங்கத்தை நானும் தாம்'லே கேட்டுக்கிட்டு நின்னேன்!"

சங்கரன் திகைத்துப் போஞன். இனித் தப்பிக்க வழி யில்லை. அன்றிரவு அவன் மாஞேம்புப் பொட்டலில் நடந்த மாணவர் கூட்டத்தில் மேடையேறிப் பேசிஞன். அன்று சுதந்திரப் பிரதிக்ஞை தினம். இந்திய நாடு சுதந்திரம் அடை வதற்காக, எழுத்து, பேச்சு, தேசியம், பொருளாதாரச் சுதந்திரங்களைப் பெறுவதற்காக, நாட்டு மக்கள் ஒன்று திரண்டு கையடித்துச் சத்தியம் செய்யும் புனித தினம். அந்தக் கூட்டத்தில் சங்கரன் காந்தியடிகளின் பெருமையைப்பற்றி, இந்திய நாட்டின் பொருளாதாரச் சீர்கேட்டைப்பற்றி, வெள்ளை ஏகாதிபத்தியத்தின் சுரண்டல் வேட்டையைப் பற்றி, நாட்டைக் காட்டிக் கொடுக்கும் 'மீர்ஜாபர்' கும்பல் களைப்பற்றி யெல்லாம் வாசாமகோசரமாய் அளந்து கொட்டி உத்வேகத்தோடு பேசிஞன். ஆஞல் அந்தக் கூட்டத்

துக்கு வந்திருந்த 'சகோதர சகோதரி'களில் தன் தந்தையும் ஒருவராக இருப்பார் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை.

அப்பாவின் குற்றச்சாட்டைத் தன் மௌனத்தின் மூலமாக உறுதிப்படுத்தினன் சங்கரன்.

"கல்லுளிமங்கன் மாதிரி ஏமிலே நிக்கிறே? கிருமமா பாடத்தைப் படிச்சுக்கிட்டு வீட்டோடெ கிட. மீட்டிங்கி, கூச்சல்—அப்படி, இப்படீன்னு அக்குருவம் பண்ணினே, அப் புறம் ஒன்னே ஒரேயடியா ஒழிச்சுக் கட்டிப்பிட்டு, புள்ளேயே இல்லேன்னு இருந்திருவேன். தூ! மூதி. இவுக போய்த்தான் இந்த தேசத்தையே தாங்கிப் பிடிக்கப் போராஹ. கோபுரத் தைப் பொம்மையா'லே தாங்குது? வேலையத்த கழுதை! சூரியனைப் பாத்து நாய் குலைக்கதாவது? வெள்ளேக்காரனை விரட்டிப் பிடுவியளோ? அவனுப் போனுப் போவானே ஒழிய, நீங்க விரட்டித்தான் போவப் போறுன்'னு நினைப்போ?"

அப்பா சரமாரியாகப் பேசிக்கொண்டே போவதைச் சங்கரனல் பொறுக்க முடியவில்லை. என்றாலும், அந்தச் சமயம் அவரது பேச்சுக்குக் குறுக்காகப் பேசினல் என்ன கிடைக்கும் என்று அவனுக்குத் தெரியும். எனவே, ஒன்றும் பேசாமல் அங்கிருந்து நழுவி மாடிக்குச் சென்றுன்.

அப்பாவின் பேச்சு பிரேக் இல்லாத வண்டி மாதிரி. நல்ல வேளையாக அம்மா வந்து குறுக்கே விழுந்திராவிட்டால், அந்த வண்டி எப்போது நின்றிருக்கும் என்றே சொல்ல முடியாது.

## 2

திருவாளர் அருணசலம்பிள்ளை அவர்களை ஊரில் எல்லோ ருக்குமே தெரியும். ஏனெனில், அவர் ஒரு அரிசி வியாபாரி. நயினர்குளப் பத்திலும், கண்டியப்பேரி சரகத்திலும் அவருக்கு ஏராளமான நன்செய் நிலங்கள் உண்டு. மேலும் துண்டு துணுக்காக, சுற்று வட்டாரக் கிராமங்களிலும் ஆங்

காங்கே நிலபுலன்கள் இருந்தன. ஒத்தி, அடமானம் முதலிய வற்றில் வந்து, முழுகிப் போன நிலங்களும், திருப்ப முடியாத தால் வட்டிக்கும் முதலுக்குமாகக் கிரயம் எழுதி வாங்கிய பாபத்துக்களுமாக, அவருக்குப் பல வழிகளிலும் சொத்துச் சேர்ந்திருந்தது. எனவே அரிசிக் கடை வைத்து நடத்துவது அவருக்கு லகுவாகவும் லாபகரமாகவும் இருந்தது. மேலும் ஊரிலுள்ள பெரியதனக்காரர் வரிசையிலும் பிள்ளையவர் களுக்கு இடம் உண்டு. அதன் காரணமாக, பிள்ளையவர்கள் வாசித்தாலும் வாசிக்காவிட்டாலும் தினசரிப் பத்திரிகை வாங்குவது. ஊருக்கு மே. த. வைஸ்ராய் பெருமானே, கவர் னர் துரை மகனே, அல்லது பக்கத்துக் காடுகளில் வேட்டை யாடுவதற்காக வரும் வெள்ளைத் தோலர்களோ—யார் வந்தா லும், அவர்களை வரவேற்பது, அரசாங்க அதிகாரிகளுக்கு 'நல்வரவு கமான்' பந்தல்கள் போட்டு மெய்க்கீர்த்தி பாடுவது போன்ற காரியங்களையும் அவர் செவ்வனே கவனித்து வருவார்.

ஜரிகை வேட்டியில் அழுக்குப் படியாமல் ஜனநாயகம் பேசி வந்த ஜஸ்டிஸ் கட்சியில் பிள்ளையவர்களுக்கு நிறைந்த ஈடுபாடு, பெருமதிப்பு. வெள்ளைத் தோலின் மகிமையைப் பற்றி அவரிடம் பேச ஆரம்பித்து விட்டால் லேசில் ஓயமாட் டார். பேச்சுக்கு முத்தாய்ப்பாக, 'நம்ம பயலுகளும் இருக் காங்களே, காட்டுமிராண்டிகள் மாதிரி' என்று கூறி முடிப்பது அவரது வழக்கம். பிள்ளையவர்களுக்கு ஜஸ்டிஸ் கட்சி யில் எவ்வளவு தூரம் நம்பிக்கை இருந்தாலும், அந்தக் கட்சியின் சிலரைப்போல் அவர் நாஸ்திகராகவோ பிரா மணத் துவேஷியாகவோ மாறிவிடவில்லை. வெளிக்கு "கடவுளாவது, மண்ணாவது? எல்லாம் ஆரியர் சூழ்ச்சி!" என்று மெட்டாகப் பேசிக்கொண்டாலும் வீட்டில் பிதுர்க் களை! மறந்து விடமட்டார். திதி கொண்டாடத் தவறமாட் டார். சந்திப் பிள்ளையார் கோயில் அந்திப் பூஜை தரிசனத் தையும், வெள்ளிக் கிழமை தேங்காய் விடலையையும் விட்டு விடமாட்டார். ராகுகாலம், வாரசூலை, சகுனம் முதலியன பார்க்காமல் வீட்டை விட்டுக் கிளம்பமாட்டார். இதனல்,

இவரை ஒரு அபூர்வப் பிரகிருதி என்றும் சொல்லிவிட முடியாது. இங்கர்ஸாலின் பகுத்தறிவுக் கட்டுரைகளில் ஒரு மனப்பட்டு ஈடுபாட்டோடு பேசுபவர்கள், கைவல்லிய நவநீதத்தையும், சிவஞான போதத்தையும் அந்தரங்க சுத்தியோடு பாராயணம் செய்வார்கள். இந்தரகப் பேர்வழிகளுக்கு நமது நாட்டில் பஞ்சமே இல்லை. எனவே அருணசலம் பிள்ளை ஆயிரத்தில் ஒருவர். அவ்வளவுதான்.

பிள்ளையவர்களின் குலத்தை விளக்க வந்த கருவேப்பிலைக் கொழுந்துதான் செல்வச் சிரஞ்சீவி சங்கரன். சங்கரன் அப்போது ஹைஸ்கூலில் உச்சாணிக் கிளையில் படித்துக்கொண்டிருந்தான். அவனுக்கு வயசு பதினறு அல்லது பதினேழு இருக்கும். அந்த வயசே ஒரு தினுசு. வாலிப வயதில் மனித உள்ளம் லட்சியக் காதலிலேயோ, காதல் லட்சியத்திலேயோ மூழ்குவது வழக்கம். துடியான இளம் பருவம் அவன் உள்ளத்தில் தாய் நாட்டின் சுதந்திர லட்சியத்தில் நாட்டம் கொள்ளும்படி தூண்டியது. கலாசாலை மேடையிலே அவனுக்கு நன்ருகப் பேசிப் பழக்கம். மேலும், தேசம் முழுவதும் பரவியிருந்த தேசியப் பற்று அவனையும் ஆட்கொண்டது. காந்தி, காங்கிரஸ், பூரண சுதந்திரம், நமதே ராஜ்யம், ஏகாதிபத்தியம் ஒழிக, முடிசூடா மன்னருக்கு ஜே—இப்படிப் பலவாருன வார்த்தைகளும் ஜய கோஷங்களும் அவன் நாவில் அடிபடலாயின. எனவே அவன் ஒரு மாணவர் சங்கம் அமைத்து, அதில் தீவிரமாய்ப் பங்கெடுத்து உழைத்து வந்தான். அந்தப் பங்கெடுப்பின் பலனகத்தான் அருணசலம் பிள்ளையிடம் அவன் வசவு வாங்கிக் கட்டிக் கொண்டான்.

அருணசலம் பிள்ளைக்குத் தம் மகனின் செய்கை கொஞ்சமும் பிடிக்காமல் போனதில் ஆச்சரியமில்லை. 'இரணியனுக்கு பிரகலாதன் வந்து வாய்த்த மாதிரி, எனக்கு இவன் வந்து பிறந்தானே' என்று மனத்தில் கறுவிக் கொண்டார். மாட்சிமை தங்கிய வெள்ளைத் தோலை எதிர்த்துப் போராடுவதைப்பற்றி அவருக்கு அவ்வளவு கவலை இல்லை. ஆனல், "அதிகார பீடத்தில் இருப்பவர்களை இந்த வாண்டுப் பயல்

எதிர்க்கவாவது? மலையோடு மோதினால் மண்டைதானே சிதறும்?'' என்றுதான் அவர் தேசிய இயக்கத்தையே கருதினார். ''கதராம், காங்கிரசாம்! அருமையா, நைஸா, எழு நூத்தி மூணு மல்லை, பீஸு பீஸாக் கொண்டாந்து குவிக்கிறான்! இவுஹ கைராட்டையை வச்சு, சாக்குத் தச்சிப் போட்டு, கவிழ்க்கப் போறாஹளாமில்லே! ஆளைப்பார்க்கலே· ஆளை!''—இப்படித்தான் இவர் பேசிக் கொள்வார்.

ஆனால் சங்கரன் தன் தந்தைக்கு நேர் விரோதமான கொள்கையைத்தான் வளர்த்து வந்தான். அருணாசலம் பிள்ளை அவனை எவ்வளவோ கண்டித்துப் பார்த்தார். மிரட்டினார். உருட்டினார். கடைசியில் அவரது மிரட்டல் உருட்டல் எல்லாம் அவருக்குத் தெரியாமல் அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபடுவதைவிட்டு, தெரிந்தே ஈடுபடும் தைரியத்தைத்தான் சங்கரனுக்குத் தந்தது. சங்கரனது லட்சிய ஆர்வமும், உழைப்பும் அவனுக்கு மாணவர்களிடம் மதிப்பும் தலைமைப் பதவியும் தேடித் தந்தன. சங்கரன் பேசுகிறான் என்றால், கூட்டம் திரண்டது. போலீஸ் இலாகா ஆள் அனுப்பி, அவன் பேச்சைச் சுருக்கெழுத்து எடுத்து வரச்சொல்லியது. இதையெல்லாம் கண்டு அருணாசலம் பிள்ளை சலித்துப் போனார். ''உங்க பிள்ளையா? என்னமாப் பேசறான் என்னமோ அந்தக் காந்தியோட மகிமை இத்தினிப் புள்ளைகளையும் கவர்ந்திருது'' என்று பேசுபவர்களிடமும், ''உங்க பிள்ளையா? கொஞ்சம் கண்டிச்சு வச்சா என்ன? இப்படி சந்தி சிரிக்கத் தறுதலையாத் திரியலாமா? நாளைக்கு ஒண்ணு இல்லாட்டா ஒண்ணுன்னா, உங்களுக்கில்லா தலைக் குனிவு?'' என்று சொல்பவர்களிடமும், ''அவன் பேச்சையே பேசாதீங்க. உருப்படற புள்ளையானால் ஒழுங்காயிருக்குமே!'' என்றுதான் பதில் சொல்லி வந்தார்.

இந்தச் சமயத்திலேதான் ஆகஸ்ட் போராட்டம் வந்தது. யுத்த நிர்ப்பந்த சங்கடங்களால் கொந்தளித்துப் பாதை தெரியாமல் தவித்துக் கொண்டிருந்த நாடு அசுர வேகத்தில் வெள்ளை ஏகாதிபத்தியத்தை எதிர்த்தது. தந்தி மரங்கள் சாய்ந்தன; ரயில்கள் கவிழ்ந்தன; சர்க்கார்

காரியாலயங்கள் தீக்கிரையாகின. நாடு முழுதும் ஒரே சொக்கப்பனை! எங்கு பார்த்தாலும் பொது மக்களின் ஆர்ப்பாட்டம்! போராட்டம்! ஊரடங்குச் சட்டம், 144, தடியடி, கண்ணீர்ப் புகை, கூட்டு அபராதம் கசையடி, சித்திரவதை எல்லாம் சர்க்காரின் பாதுகாப்பு ஆயுதங்களாயின.

சங்கரனால் சும்மா இருக்க முடியவில்லை. இதுதான் இறுதிப் போராட்டம் என்று எங்கிருந்தோ அறை கூவல் வந்தது. அவன் கண்முன் வரப்போகும் சொக்க சாம்ராஜ்யத்தைக் கனவு காண, உருவகப்படுத்திப் பார்க்க முடிந்தது. சங்கரன் போராட்டத்தில் ஈடுபட்டான். பள்ளிக் கூடத்தைத் துறந்தான்; மாணவர்களை, இளைஞர்களை ஒன்று சேர்த்து ரகசிய வேலைகளில் ஈடுபட்டான், எங்கிருந்தோ எப்படி யெப்படியோ சுற்றறிக்கைகளும் பண உதவியும் வந்தன. அந்த ஊரில் இருபது வயது நிரம்பாத சங்கரன் தூக்குக் கயிற்றை முத்தமிடவும் துணிந்து நின்றான். ஊர்வலங்கள், கூட்டங்கள், ஆகஸ்ட் போராட்டத்தின் கிரியாம்சமென்று சொல்லப்பட்ட பதினாறு திட்டங்கள் எல்லாவற்றிலும் ஈடுபட்டு உழைத்தான். அதன் காரணமாகப் போலீசாரின் தடியடிக்கும், கண்ணீர்ப் புகைக்கும் ஆளானான். எனினும் அவன் அவர்கள் கையில் சிக்கவில்லை.

முடிவில் இந்தியப் பாதுகாப்புச் சட்டம் 129:ம் செக்ஷன் பிரகாரம் எங்கேயோ ஒரு கிராமத்தில் கைது செய்யப்பட்டு, வேலூர் சென்ட்ரல் ஜெயிலுக்குக் காவல் கைதியாக அனுப்பப்பட்டான்.

அருணாசலம் பிள்ளை முயன்றிருந்தால், தம் செல்வாக்கின் மூலம் தம் மகனைக் கம்பி எண்ணவிடாமல் பாதுகாத்திருக்கலாம். இருந்தாலும் அவரது வைராக்கிய சித்தம் அவனுக்கு எந்தவித ஒத்தாசையையும் செய்ய முன்வரவில்லை; சங்கரனும் எவ்வித ஒத்தாசையையும் எதிர்பார்க்கவில்லை. பிள்ளையவர்களின் பெற்ற மனம் மகனின் கதியை எண்ணிக்

கொஞ்ச நாட்களுக்கு மறுகியது; பிறகு மரத்துப்போய் விட்டது.

அப்போது யுத்த காலம். பிள்ளையவர்களின் வியாபாரம் சுறுசுறுப்படைந்தது. அரிசி விலை ஏறிற்று. பஞ்ச இந்தியா வெள்ளை ஏகாதிபத்தியத்துக்கு லக்ஷோப லக்ஷமாகக் கடன் கொடுத்தது; நாட்டில் புதுப்புது செலாவணி நோட்டுக்கள் நடமாடின. பிள்ளையவர்களின் கையில் நம்பர் வரிசை குலையாத செலாவணி நோட்டுக்கள் புழங்கின. மேலும் ராணுவத்துக்கு அரிசி, வத்தல், காய்கறி முதலியன அனுப்பும் வியாபாரத்திலும் அவர் ஒரு காண்ட்ராக்டர் ஆனார். பணம் புரண்டது. அதன் காரணமாக, அந்த வருஷம் அவருக்கு நயினார் குளப் பத்தில் பல ஏக்கர் நிலம் வந்து சேர்ந்தது; வீட்டின் உயரம் இன்னும் ஒரு முப்பது அடி உயர்ந்தது; மனைவியின் கழுத்தில் வைர அட்டிகை தொங்கியது; கள்ள மார்க்கெட், கொள்ளை லாபம் எல்லாம் அவருக்கு ஆய்வந்த கைராசியாய் விட்டன. மேலும், நகர உணவுக் கமிட்டியிலும் பிள்ளையவர்களுக்கு ஒரு ஸ்தானம் கிடைத்தது. யுத்த நிதி வாங்கவந்த கவர்னர் துரை மகனும், துரை மகளும் பிள்ளையவர்களின் கையைக் குலுக்கி விட்டுப் போனார்கள். இதையெல்லாம் கண்டு பிள்ளையவர்கள் அப்படியே குளிர்ந்து போனார். நேச நாட்டு வெற்றியில் என்றைக்குமில்லாத அக்கறை கொண்டார். யுத்தப் பிரசாரக் கூட்டத்துக்கு உதவி செய்தார்; தாமும் பேசினார்.

அவர் பெயர் பிரபலம் அடைந்தது. 'யுத்தச் செய்தி'ப் பத்திரிகையில் அவரது புகைப் படம் 'போஷகர்' என்ற விருதோடு பிரசுரிக்கப்பட்டது.

வருஷக் கடைசியில் அவரை ராவ்சாகிப் பட்டம் தேடி வந்தது. இருந்தாலும், அவர் தம் பெயரில் ஒரு ஆகாய விமானம் வாங்கி அனுப்ப வேண்டுமென்று சொல்லிக்

கொண்டிருந்தார். ஆகாய விமானம் வாங்குவதற்குப் போதிய பண வசதியில்லையென்றாலும், வெள்ளைத் தோல் தமக்கு மேன்மேலும் வசதிகள் செய்து கொடுத்தால் அது சாத்தியமாகும் என்று அவர் கருதினார். சௌகரியம் கிடைத்தது; அந்தச் சமயம் அவர் தம் செல்வத்தை விருத்தி பண்ணிக் கொண்டாரே ஒழிய ஆகாய விமானத்துக்கு நிதி அளிக்கவில்லை.

அதற்குள் யுத்தமும் நின்று போயிற்று. "நாசமாப் போற பயல்ஹ! அணுகுண்டை அமெரிக்காக்காரன் போட, ரஷியாக்காரன் மறுபக்கம் தாக்க, சண்டையையே நிறுத்திப் போட்டாங்களே. எம் பொழைப்பிலே மண்ணைப் போட்டுட்டாங்களே" என்று மனசுக்குள் உறுமிக் கொண்டார்.

யுத்தம் முடிந்தவுடன் சிறையிலடைபட்ட தலைவர்கள் வெளி வந்தார்கள். சங்கரனும் வந்தான்; ஆனால், சங்கரன் பழைய தேசியவாதி சங்கரனாக வரவில்லை. ஜெயிலுக்குள் அவன் கற்ற பாடம் அவனுக்குப் புதுப் புதுச் சொற்றொடர்களை, அதன் அர்த்தத்தைக் கற்றுத் தந்திருந்தது. ஜெயிலுக்குள் அடைபட்ட அரசியல் இளைஞர்களிடம் அவனும் ஞானோபதேசம் பெற்றிருந்தான். சோஷியலிசம், கம்யூனிசம், கிஸான் பிரச்சினை, உழுபவனுக்கு நிலம், உழைப்பவனுக்கு உணவு, புரட்சி, மே தினம், முதலாளித்துவம், பூர்ஷ்வா, புராலி டேரியட்...... எத்தனை எத்தனையோ விஷயங்களைப் பற்றியெல்லாமோ பேசினான்.

தலைவர்கள் வெளியே வந்தவுடன் அரசியல் பேச்சு வார்த்தைகள் நடந்தன. அரசாட்சி கைமாறும் போல் தோன்றியது. பாடுபட்டதற்குப் பலன் கிடைத்துவிட்டது என ஊழியர்கள் கருதினார்கள். அருணாசலம் பிள்ளையும் 'ஊரோடு ஒத்து வாழ்!' என்ற உலக நீதியின் அர்த்த விசாலத்தை முற்றுற உணர்ந்து காங்கிரசைப் போற்ற ஆரம்

பித்தார். மேலும், இனிமேல் தடியடி தர்பார், 144, சிறைவாசம், சத்தியாக்கிரகம் போன்றனவற்றுக்கு இடமில்லை என்ற ஞானம் பிறந்ததும், அவர் காங்கிரஸில் நாலணு மெம்பரானுர். மல் வேஷ்டியைக் களைந்துவிட்டு, அத்தாட்சி பெற்ற கதர் உடுத்தினுர். அஹிம்சா தர்மத்தையும், ராமராஜ்யத்தைப் பற்றியும் பிரசங்கம் பண்ணினுர். காலம் செல்லச் செல்ல, அவர் ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டியில் அங்கத்தினரானுர். ஜில்லா போர்டுத் தலைமைப் பதவி தேர்தல் வந்தால் ஒருகை பார்க்கலாம் என்றும் காத்துக் கொண்டிருந்தார்.

சங்கரன் வெளியில் வந்ததும் ஆக்க வேலைகளில் ஈடுபடுவதாகச் சொல்லிப் புறப்பட்டான். கிஸான் இயக்கம், குடிவாரம், உரிமைப் போராட்டம், மத்தியஸ்தம்—என்று பற்பல காரியங்களில் ஈடுபட்டு மூங்கி முழுகி விட்டான். ஜில்லாவின் கிஸான் இயக்கத்துக்குத் தலைவரானுன்.

அப்பாவும் மகனும் தேசத்துக்குத்தான் உழைத்தனர். ஆனுல் அன்றும் அவர்கள் இரணியன் பிரகலாதனுகவே இருந்தனர்.

## 5

இப்போது இந்தியா சுதந்திர நாடு.

தலைவர்கள் தியாகிகளை வாழத்தினுர்கள். உயிரைக் கொடுத்துப் போராடிய வீரர்களை வணங்கினுர்கள். தேசத் தியாகிகள் பட்ட கஷ்ட நஷ்டத்துக்காக அவர்களுக்கு நிலமான்யம் வழங்க உத்தேசித்தார்கள்.

ஒரு நாள் தலைவர் அருணுசலம் பிள்ளை கூடத்தில் அமர்ந்து ஏதோ எழுதிக்கொண்டிருந்தார். சங்கிரன் மாடியிலிருந்து இறங்கிக் கீழே வந்தான்.

"சங்கரா, இங்கே வாடா" என்று அருமையாக அழைத்தார் அருணுசலம் பிள்ளை.

சங்கரன் போனான்.

"இதைப் படிச்சிப் பார்த்துட்டு ஒரு கையெழுத்துப் போட்டுக் குடு."

சங்கரன் படித்துப் பார்த்தான். அவன் எவ்வளவு காலமாக, தேசிய இயக்கத்தில் பங்கெடுத்தான் என்பதும், ஆகஸ்ட் போராட்டத்தின்போது அவன் பட்ட கஷ்ட நஷ்டங்கள், தண்டனைகள் என்னென்ன என்பதும் சாங்கோ பாங்கமாக எழுதப்பட்டு, அடியில் அவனது தியாகத்துக்குப் பிரதியாக நிலமான்யம் வேண்டியும் ஒரு வரி எழுதப் பட்டிருந்தது.

"நான் ஒண்ணும் இதிலே கையெழுத்துப் போட மாட்டேன்" என்றான் சங்கரன்.

"ஏண்டா?"

"நமக்குத்தான் நிலபுலம் ஏராளமாக இருக்கே. இந்த ஐந்து ஏக்கர் வந்துதான் நெறையப் போவுதா?" என்று நாசூக்காகக் கேட்டான்.

"போடா பைத்தியக்காரா! வந்ததை வரப்பத்தணும். தெரியுமா?" என்று லோகானுபவ பூர்வமாகப் பேசினார் பிள்ளை.

"அதெல்லாம் இல்லை. என் கொள்கை அதுவல்ல."

"என்னடா பெரிய கொள்கையைக் கண்டுட்டே? உனக்கு என்னைக்காவது ஸ்திரமான கொள்கை இருக்கா? ஜெயிலுக்குப் போறதுக்கு முன்னாலே காங்கிரஸ், காங்கிரசுன்னே! இப்போ என்னடான்னா. கம்யூனிஸமும், சோஷியலிஸமும் பேசுதே. இதுதான் உன் கொள்கையோ?"

"அப்பா, கொள்கையை மாற்றுவது குற்றமல்ல. அது சமய சந்தர்ப்பத்தையும், வளர்ச்சியையும் பொறுத்தது.

அதையறியாமல், மாற்ற முனையாமல் இருப்பது தான் குற்றம்!'' என்று தத்துவம் பேசினான் சங்கரன்.

''அது சரிதாண்டா. கொள்கையை மாத்த வேண்டியது தான். இப்போ நான் மாத்திக்கலையா? மாத்தறது நம்ம நன்மைக்குத்தாண்டா. தெரிஞ்சிதா?'' என்றார். பிறகு ஒரு கணம் கழித்து, ''சரி சரி, இதிலே ஒரு கையெழுத்துப் போடு'' என்றார்.

''முடியாது.''

''ஏண்டா, நீ தியாகம் செய்யல்லையா? தியாகிகளுக்குத் தான் நிலம் குடுக்கிறாஹளே. வாங்கினா என்ன?''

''நாங்க செய்த தியாகம் இந்தச் சுதந்திரத்துக்கல்ல. வாழ்வில் சுபிட்சத்தை, சொர்க்க சாம்ராஜ்யத்தை எதிர் பார்த்து ஏமாந்த தியாக ஊழியர்களைக் கட்டுப்படுத்தும், வாயடைக்கச் செய்யும் ராஜதந்திரம் இது! இந்தச் சூழ்ச்சிக்கு நான் உடன்படமாட்டேன்!''

''பெரிய சூழ்ச்சியைக் கண்டுவிட்டாய்? ஐந்து ஏக்கர் நிலம் சும்மா வருதுன்னா, சூழ்ச்சியா அது?''

''அப்பா, நான் இந்த அஞ்சு ஏக்கர் நிலத்தை எதிர் பார்த்துத் தியாகம் பண்ணலை. என் தியாகத்துக்கு விலையும் அதுவல்ல. நான் தியாகம் பண்ணியது எனக்கு நிலம் கிடைக்க வல்ல. இந்த நாட்டிலுள்ள பஞ்சை விவசாயி அத்தனை பேருக்கும், உழுபவர் யாவருக்கும் நிலம் கிடைப்பதற்குத் தான், தெரியுமா?''

''அட சரிதான். இங்கே பிரசங்கம் பண்ணாதே. கையெழுத்தைப் போடு'' என்று சாவதானமாகச் சொன்னார் பிள்ளை.

''முடியாது. என்னை விலைக்கு வாங்க முடியாது!''

மறுகணம் சங்கரன் அங்கே நிற்கவில்லை. வெளியே போய்விட்டான்.

பிள்ளையவர்கள் மனுவை மடித்துவைத்துவிட்டுத் தமக்குத்தாமே பேசிக்கொண்டார்: ''பிழைக்கத் தெரியாத புள்ளே! அன்னைக்கி என்னடான்னா, அந்தக் கவர்மென்டை எதிர்த்து ஜெயிலுக்குப் போனன். இன்னைக்கின்னா இந்தக் கவர்மெண்டோடு திண்டு முண்டு பேசிக்கிட்டிருக்கான். மூதிக்கு என்னைக்குத் தான் நல்ல புத்தி வருமோ தெரியலை!''

—1950

# காதல் கதை!

**அன்புள்ள பத்திரிகை ஆசிரியர் அவர்களுக்கு,**
**நமஸ்காரம்.**

ஆண்டு மலருக்கு என்னிடமிருந்து அருமையான காதல் கதை ஒன்றை எதிர்பார்ப்பதாக எழுதியிருக்கிறீர்கள். உங்கள் வேண்டுகோளை நிறைவேற்றி விடுவது என்ற வைராக்கிய சித்தத்தோடுதான் நானும் நாலு நாட்களாய் மண்டையைப் போட்டுக் குழப்பிக் கொண்டிருக்கிறேன். இந்த நிமிஷம் வரை ஒரு இழவு காதலும் உதயமான பாட்டைக் காணோம். மேலும் இப்போது எனக்கிருக்கும் தொல்லைகளில் காதலைப் பற்றிச் சிந்திக்கவே முடியாது. இப்போது என் சிந்தனையில் இருப்பது காதல் அல்ல; கத்தரிக்காய்தான். ஏனெனில் மத்தியானச் சமையலுக்குக் கத்தரிக்காயோ வேறு என்ன இழவுக் காயோ வாங்கிவர மார்க்கெட்டுக்குச் சென்று வரவேண்டும். இந்த அழகில் கைப்பிடித்த அருமை மனைவி அருகில் இருந்தாலும்கூட, காதலைப் பற்றி எங்கே நினைக்க முடியும்? மனைவியோ மத்தியானச் சமையலுக்கு செலவு பட்ஜெட்டுடன் வந்து நிற்கிறாள்! கையிலிருக்கின்ற ஒன்றரை அணாவையும் செலவழித்து விட்டால், அப்புறம் யாரிடமாவது கைமாத்து வாங்கிவர, கார்ச் செலவுக்குக்கூடச் சில்லரை இராதே என்ற கவலை எனக்கு. மனைவியோ கத்தரிக்காய் வாங்குவதற்காக, பணம் கேட்டு நிற்கிறாள்; நீங்களோ காதல் எழுதித் தந்தால் பணம் தருவீர்கள். எனவே இந்தச் சமயத்தில் நான் காதலாவது கத்தரிக்காயாவது என்று அசிரத்தையாய் இருக்க முடியாதுதான். ஏனெனில் என்னைப்

பொறுத்தவரை. இந்த சந்தர்ப்பத்தில் காதல் இல்லை யென்றால், கத்தரிக்காயும் இல்லை அல்லவா...?

இருங்கள் ஏதோ கூச்சல் கேட்கிறது. என் வீட்டுக்கு எதிர்த்தாற்போலுள்ள ரேஷன் கடையில் காலை ஆறு மணிக்கே வந்து ஆறவுன்ஸ் அரிசிக்காக, க்யூ வரிசையில் தவம் கிடக்கின்ற ஜனங்களின் கசமுசப்புத்தான். இந்த அதிகாலைப் பொழுதிலேயே அந்த அடைத்த கடையின் முன்னால் புழுத்த அரிசிக்காக ஆணும் பெண்ணும் தவம் புரிகிறார்கள். தவத்துக்குப் பயந்து பிரசன்னமாகிக் கேட்டு வரத்தைத் தந்து விட்டுப் போக, ரேஷன் கடைக்காரன் தெய்வமா என்ன? அவன் எப்போதெப்போது வந்து சேர்கிறானோ? அதோ அந்த க்யூ வரிசையில் எத்தனை எத்தனை வாலிபர்கள் நிற்கிறார்கள்! அழகான யுவதிகளும்தான் நிற்கிறார்கள்! 'அவர்களில் இருவரை ஆணும் பெண்ணுமாகப் பொறுக்கி, காதல் கதையைத் தட்டிவிடுங்களேன்! கற்பனைக்கா பஞ்சம்?' என்று தாங்கள் கூசாமல் சொல்லலாம். கண்டதும் காதல் என்ற கதைதான் இப்போது 'அவுட் ஆப் டேட்'டாகப் போச்சே. மேலும், அங்கு கால் கடுக்க நிற்கும் வாலிப உள்ளங்களில் ஆறு அவுன்ஸ் அரிசியைத் தவிர, வேறு ஏதாவது சிந்தனை இருக்கவா போகிறது? அவர்களைப் பார்த்தவுடன் எனக்கும் கூட ஆறவுன்ஸ் சிந்தனைதான் மேலிடுகிறது. நானும்தான் இந்த வார ரேஷனை வாங்கியாக வேண்டும். ஆனால் ரேஷன் வாங்குவதற்கு முன்னால், முதலில் பணம் பார்த்தாக வேண்டும். பணம் பார்த்தாக வேண்டுமென்றால், தற்சமயம் தங்களுக்கு ஒரு காதல் கதை எழுதியாக வேண்டும். எப்படிப் பட்ட தர்ம சங்கடம் பார்த்தீர்களா?

சரி. நான் இப்படியே கதையளந்து கொண்டு போனால், நீங்கள் பணமும் கொடுக்கப் போவதில்லை; என்னுடைய பணத் தேவையும் மறைந்துவிடப் போவதில்லை. எனவே நான் இப்போது எப்பாடுபட்டேனும் ஒரு காதல் கதையை, கதைத்துத்தான் தீர வேண்டும்...

சரி. கதைக்கிறேன்...

காதல் கதை எழுதுவதற்கு ஒரு ஆணும் பெண்ணும் நிச்சயம் வேண்டும். இல்லையா? இதோ அவர்கள்...

மீனாட்சி அழகான யுவதி. எலுமிச்சம் பழம் போன்ற மேனி; எள்ளுப்பூ போன்ற நாசி; கார்மேகம் போன்ற கூந்தல்; கயல்மீனைப் போன்ற கண்கள்; குங்குமப்பூப் போன்ற இதழ்கள்; கொடி போன்ற திருமேனி...

வருணிக்கத் தொடங்கினல், அதற்கு ஓர் எல்லை கிடையாது. ஆனல், என் வயிற்றுப் பசிக்கு எல்லையுண்டு. எனவே...

மீனாட்சியைப் பற்றியா சொன்னேன்! அவள் பருவ யுவதி. வயது பதினாறுக்கு மேலிருக்கும். அவள் தனது பருவத்தைப் பற்றிக் கவலை கொள்வதைவிட, அவளுடைய பெற்றோர்களுக்குத்தான் அதைப் பற்றி அதிகப்படியான கவலை. ஏனெனில் அவள் வீட்டுக்குள் அடங்கி உட்கார்ந்து மூன்று வருஷங்களுக்கு மேலாகிவிட்டது. இன்னும் அவளுக்குக் கல்யாணப் பேச்சு வார்த்தை எதுவும் நடைபெற வில்லை. ஆயிரம் பொய்யைச் சொல்லியாவது ஒரு கல்யாணத்தைப் பண்ண வேண்டும் என்று அனுபவஸ்தர்கள் சொல்கிறார்கள். மீனாட்சியின் பெற்றோர்கள் ஆயிரம் பொய்களைச் சொல்வதற்கு அஞ்சவில்லை ஆனல், ஆயிரம் பொய்களோடு கையிலும் ஆயிரம் ரூபாயாவது வேண்டாமா? அது மட்டும் இல்லை.

ஏழைக் குடும்பம். உருப்படி அதிகம். தகப்பனார் சம்பாதித்துக் கொண்டு வந்து கொட்டும் பணம் வயிற்றுக்குள் கொட்டுவதற்கே சரியாகிவிடும். இந்த அழகில் பெண்ணுக்கு வரன் பார்த்துச் சீர் சிறப்புச் செய்து கல்யாணம் செய்து வைப்பது எவ்வாறு சாத்தியம்? மீனாட்சி என்னவோ கண் நிறைந்த அழகியாகத்தான் இருந்தாள்,

இருந்தாலும், கையைப் பிடிக்க வருபவன் அழகை மட்டும் தானு கவனிக்கிறுன்? கழுத்து நிறைந்த நகைகள் கிடந்தால் மந்திப் பிறவிகளேக்கூட, மகாலக்ஷ்மிகளாக மதிக்கும் இன்றைய உலகில் அவள் உடம்பில் 'அஞ்சு களஞ்சித் தங்கமாவது வேண்டாமா?

இந்த உலகமே ஒரு தினுசானது. பணம் படைத்தவர்கள் வீட்டுப் பெண்கள் வருஷக் கணக்காய் வீட்டுக்குள் அடங்கியிருந்தாலும், அக்கம்பக்கத்தார் கொஞ்சங்கூட வாயசைக்க மாட்டார்கள். ஆனுல் இல்லாதவன் வீட்டுப் பெண், எளியவன் வீட்டுப் பெண்ணுக்குச் சீக்கிரத்தில் கல்யாணமாகாவிட்டால், ஊரில் நாலு தினுசாய்ப் பேச்சுக்களில் ஒரு தினுசுப் பேச்சாவது மீனுட்சியின் பெற்ருேர்களின் காதில் விழாமலா போகும்? விழத்தான் செய்தது. பெண்ணுக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைக்க வகையில்லேயே என்று அவர்களும் கவலேப்பட்டுக் கொண்டுதான் இருந்தார்கள்.

ஆனுல், மீனுட்சிக்கு இப்போது வேறு கவலே. அது என்ன என்று சொல்வதற்கு முன் உங்களுக்கு இன்னெரு விஷயத்தை முதலில் சொல்லியாக வேண்டும்.

காதல் காதல் என்று துடிக்கிறீர்களே! அந்தக் காதலால் வந்த கவலேதான் அவளுக்கு. மீனுட்சியின் கவலேயைப் பற்றி உங்களுக்கென்ன கவலே? காதல் வந்து விட்டதல்லவா? இனிமேல், நீங்கள் நிமிர்ந்து உட்கார்ந்து சுவாரசியமாகப் படிக்கத் தொடங்க வேண்டியதுதானே! சரி, கதையைச் சொல்லுங்கள் என்று நீங்கள் அவசரப்படுவது எனக்குத் தெரியத்தான் செய்கிறது. சொல்லி விடுகிறேன்...

இரண்டு மாதங்களுக்கு முன்னுல், பட்டணத்திலிருந்து மீனுட்சி வீட்டுக்கு எதிர் வீட்டுக்கு ஒரு வாலிபன் வந்து சேர்ந்தான். சும்மா இரண்டு மாச லீவைப் போக்க வந்தவன்

அவன். எதிர் வீட்டுச் சாம்பசிவ மாமாவின் அண்ணு பிள்ளை அவன். அவன் தானே கதாநாயகன் என்று கேட்கிறீர்களா? ஆமாம், அவனே தான். பெயர்? நீங்களே ஏதாவது ஒரு பெயரை வைத்துக் கொள்ளுங்களேன்! ராமசாமி—சேச்சே!—அதைவிட, சொக்கலிங்கம் என்றே வைத்துக் கொள்வோம். பேர்ப் பொருத்தமாவது இருந்து தொலையட்டுமே!

சொக்கலிங்கம் 'ஆடவர் பெண்மையை அவாவும்' அழகன் தான். குறுகுறுவென்று விழிக்கும் கரிய கண்மணிகள்; புன்னகை தவழும் வடிவார்ந்த உதடுகள்; கற்றைச் சுருள்கள் கொண்ட அழகிய கிராப். மன்மத அவதாரம் தான் போங்கள்!

சொக்கலிங்கம் ஊரிலிருந்து வந்து சேர்ந்த அன்றைத் தினத்தில் மீனாட்சி வீட்டு ஜன்னலருகே நின்று தலைவாரிக் கொண்டிருந்தாள். வண்டியை விட்டு இறங்கிய சொக்கலிங்கம் மீனாட்சியைக் கவனித்தான்; மீனாட்சியும் அவனைக் கவனித்தாள். இருவர் கண்களும் ஒரு கணம் எதிரெதிராக வந்த அம்புகள் ஒன்றுக்கொன்று மோதி விழுவதுபோல் கீழே நோக்கின.

கதையை அதிகம் விரிப்பானேன்? அன்று முதல் மீனாட்சியின் கண்களும் சொக்கலிங்கத்தின் கண்களும் இப்படியே பல தடவை மோதி மோதி விழுந்தன.

பிறகு கேட்பானேன்? காதல் பிறந்தேவிட்டது!

கண்களிலே ஆரம்பித்த காதல், பிறகு உதடுகளில் நெளிந்த புன்னகையால் தெம்பு பெற்றது; ஊராரும் உற்றாரும் அறியாமல் இருவரும் ரகசியமாகப் பேசிக் கொள்ளும் பேச்சினுல் வளர்ச்சி பெற்றது; வாய்க்கால் கரை படித்துறையில் ஒருவரையொருவர் தொட்டுப் பழகிய ஸ்பரிச சுகத்தில் மின்சாரமாகச் சில்லிட்டுப் பரந்தது; அந்தியிருளில் மெல்லிய நிலவொளியிலே ஐக்கியம் கண்டது. இப்படியாக அவர்கள் இருவரது காதலும் அந்த நிலவைப்

போலவே வளர்ந்து பெருகிப் பூர்ணிமை மயமாகப் பரிண மித்தது. ஆனால் அந்தக் காதலின் பூர்ணிமைப் பரிணமிப்புக்கு முன்பே, மீனாட்சியின் கருப்பையிலும் ஓர் உயிர் பரிணமித்து உருப்பெறத் தொடங்கிவிட்டது!

ஆம். இரண்டு மாத காலத்தில் மீனாட்சி கர்ப்பவதியாகி விட்டாள். கலியாணமாகாத கன்னி கர்ப்பவதி. சொக்கேசன் தந்த வரப்பிரசாதம்; வயிற்றிலே இரண்டு மாதம்! மசக்கை தலை காட்டியது. வாயும் மனமும் குமட்டியது. வீட்டுக்குத் தெரியாமல் அவள் அந்தக் குமட்டலை மூடி மறைக்க அரும் பாடு பட்டாள்; தவியாய்த் தவித்தாள். அந்தத் தவிப்பை வருணிப்பானேன்? காதல் கதையில் அபசுரம்போல் அந்தக் கண்றாவிகளெல்லாம் எதற்கு?

மீனாட்சி சொக்கலிங்கத்தை எவ்வளவோ வேண்டிக் கொண்டாள்; காலில் விழுந்து மன்றாடினாள், தன்னைக் கல்யாணம் செய்துகொண்டு தன் மானத்தைக் காப்பாற்றும் படி கெஞ்சினாள்; வற்புறுத்தினாள். ஆனால் காதல் விவகா ரத்தில் அஞ்சா நெஞ்சனாக இருந்த சொக்கலிங்கமோ, கல்யாணம் என்றதும், கோழையாக மாறிவிட்டான். இருந் தாலும், மீனாட்சியின் பரிதாபமும், அவனது மனச்சாட்சியும் அவனை மனிதனாக்க முயன்றன.

கடைசியில் ஊர்ப் பொல்லாப்புக்கு அஞ்சித் தவித்த மீனாட்சியும், உற்றார் உறவினரை எதிர்த்து நிற்கத் தைரிய மில்லாத சொக்கலிங்கமும் ஒருநாள் இரவு ஊரைவிட்டே ஓடி விட்டார்கள். மறுநாள் முதற்கொண்டு, எதிர் வீட்டுப் பையனோடு ஓடிப்போய்விட்ட மீனாட்சியைப் பற்றிப் பேசுவது, சும்மா கிடந்த ஊர் வாய்க்கு அவல் கிடைத்த வெற்றியாகிவிட்டது. ''இரண்டுபேரும் செய்த காரியத்தைப் பார்த்தீர்களா?'' என்று எல்லோரும் மூக்கின்மேல் விரலை வைத்து வியந்தார்கள். அவர்கள் இருவரும் தங்கள் இரண்டு பேருக்காக மட்டும் ஓடவில்லை, அழையா விருந்தாளியாக

வந்து புகுந்துவிட்ட மூன்ருவது பேர்வழிக்காகத்தான் ஓடிஞர்கள் என்பது அந்தக் காதலர்களைத் தவிர வேறு யாருக்குத் தெரியும்?

மீனுட்சியின் பெற்ருேருக்கு ஏற்பட்ட தலைக் குனிவைப் பற்றிச் சொல்லவே நீதமில்லை. மேலும், காதலர்கள் அவர்களை விட்டுப் பிரிந்த பிறகு, நமக்கு மட்டும் அங்கு என்ன வேலை! காதலர்களை நாமும் பின் தொடர்வோம்........

காதலர்கள் பட்டணத்துக்கு ஓடி வந்துவிட்டார்கள். அப்புறம் இதற்குமேல் கதையை எப்படித் தொடர்வது? பட்டணத்துக்கு ஓடிவரும் காதலர்கள் என்ன ஆஞர்கள்? என்ன ஆவார்கள்?

பட்டணத்துக்கு ஓடிவரும் கள்ளக் காதலர்களுக்கு வர வேற்பு அளித்து விருந்துபசாரம் செய்யப் பட்டணத்தில் பங்களாவா கட்டி வைத்திருக்கிருர்கள்? சித்தப்பா வீட்டுச் சாப்பாட்டைச் சாப்பிட வந்த சொக்கலிங்கத்துக்கும் பெற்ருேர் சம்பாதித்துப் போடும் சோற்றைத் தின்று வளர்ந்த மீனுட்சிக்கும் எழும்பூர் ஸ்டேஷனில் இறங்கியதும் வரவேற்க, பசிதான் காத்திருந்தது.

கையிலிருந்த காசுக்கு ஏதோ சாப்பிட்டார்கள். அப்புறம் அவர்கள் இருவரும் எங்காவது தங்குமிடம் கிடைக்குமா என்று யோசித்தார்கள். சொக்கலிங்கம் ஒரு நண்பனின் வீட்டில் சில நாள்பாட்டுக்கு இடம் பிடித்தான். ஆனுல், காதல் மட்டும் இருந்துவிட்டால் போதுமா? காதல் பிழைப் பதற்குக் கையில் காசு வேண்டாமா? சொக்கலிங்கம் எங்கெங்கோ வேலை தேட முயன்ருன். ஒரு இடத்திலும் வேலை கிடைக்கவில்லை. தெய்விகக் காதலுக்கு ஆளான அந்த இளந்தம்பதிகள் பட்டினி கிடந்து மாளக்கூடாது என்ற உயர்ந்த நோக்கத்தோடு எந்தத் தீனதயாபரன் சொக்க லிங்கத்தை வெற்றிலை பாக்கு வைத்து வேலைக்கு அழைக் கிருன்?

கையிலிருந்த நோட்டுகள் வெள்ளிப் பணமாகி, சில்லரையாகி, செப்புக் காசாகி நாளுக்கு நாள் கரைந்து கொண்டே வந்தது. இருவர் உடலும் நாளுக்கு நாள் மெலிந்தும் வந்தது. ஆனால் மீனாட்சியின் வயிற்றுக்குள் இருந்த சிசு மட்டும் பெற்றோரின் கவலையையே அறியாமல் நிர்விசாரமாய் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ச்சி பெற்று வந்தது.

ஒரு நாள் இரவு சொக்கலிங்கத்துக்குப் புதியதொரு ஞானோதயம் பிறந்துவிட்டது. காதலைவிட, மீனாட்சியைவிட, அவள் வயிற்றில் வளரும் தன் ரத்த பந்தமான சிசுவைவிட, தன் உயிராசைதான் பெரிது என்ற உண்மை அவன் உள்ளத்தில் உதயமாகி விட்டது. அந்த ஞானபோதம் பிறந்தவுடனேயே, சொக்கலிங்கேசுவரர் அந்தர்த்தியானமாகிவிட்டார்! ஆம், சொக்கலிங்கம் அன்றிரவே சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப்போய் விட்டான்!

மீனாட்சியின் கதி நிர்க்கதியாயிற்று!

நடுத்தெருவில் விடப்பெற்ற மீனாட்சி நாதியற்றுப் புலம்பினாள். புலம்பினால் வயிறு நிறைந்துவிடுமா? கடைசியாக, அவளும் எப்படியோ நாலு வீட்டில் பத்துப் பாத்திரம் துலக்கித் தன் வயிற்றைக் கழுவினாள். ஆனால், வயிற்றிலுள்ள பிண்டத்தைக் கழுவவில்லை; கழுவ விரும்பவுமில்லை. அதற்கு அவசியமும் இல்லை

அப்புறம்.........

மாதங்கள் சென்றன.

ஒரு நாள் காலையில் மீனாட்சி தர்ம ஆஸ்பத்திரியில் ஒரு அழகிய ஆண் மகவுக்கு, அப்பன் முகத்தை அப்படியே உரித்து வைத்திருந்த ஆண் பிள்ளைச் சிங்கத்துக்கு, பரணி நட்சத்திரத்தில் பிறந்த பாலகனுக்குத் தாயானாள்.

ஆஸ்பத்திரி என்பது நோய்க்கு மருந்து கொடுக்குமே தவிர, பசிக்குச் சோறு கொடுக்கும் அன்னச் சத்திரம்அல்லவே! எனவே ஒருநாள் காலையில் மீனாட்சி தன் கைக்குழந்தையே துணையாக, ஆஸ்பத்திரியை விட்டு நடுத் தெருவுக்கு வந்தாள். பழையபடியும் வயிற்றுப் பிரச்னை தலை தூக்கியது. முன்னர் வேலை பார்த்த வீடுகளுக்குச் சென்று வேலை கேட்டாள். கைப்பிள்ளைக்காரியை வேலைக்கு வைத்துக்கொண்டு கஷ்டப் பட, நாகரிகம் தெரிந்த பட்டணத்து வாசிகளுக்குப் பைத்தியமா, என்ன?

எங்கும் வேலை கிடைக்கவில்லை. பசி! பட்டினி!

அவள் தான் பட்டினி கிடந்தாள்; அவள் மகனோ தாயின் மார்பிலிருந்து பாலை உறிஞ்சித் தீர்த்தான்; பசியாறினான்! ஆனால் பட்டினி கிடந்து மாளும் தாயின் மார்பிலிருந்து வற்றா வளஞ் சுரக்க, அவளென்ன அமுத சுரபியா? அட்சய பாத்திரமா?

குழந்தைக்கும் போதிய பாலில்லை. அவள் வேலைக்காக அலைந்தாள்; குழந்தைக்கு அரை ஆழாக்குப் பாலுக்காக அலைந்தாள். ஆனால் எங்கெங்கோ கை நீட்டிக் கேட்டும், கண்ணீர்விட்டுக் கெஞ்சியும் அவளுக்கு எதுவும் கிட்டவில்லை, அழவும் சீவனற்று அடங்கி ஒடுங்கிப்போன கைக் குழந் தையோடு, எய்த்துக் களைத்துச் சோர்ந்துபோய் இருள் சூழ்ந்து கிடக்கும் தெரு மூலையில் நாதியற்றுப் போய் நின்று கொண்டிருந்தாள். ஏனென்று இரக்கப்பட்டுக் கேட்க ஒரு மனிதப் பிறவியைக்கூடக் காணாது மயங்கி நின்றுகொண்டி ருந்தாள்.

அந்தச் சமயத்தில்தான் அந்தக் குரல் அவள் காதில் விழுந்தது.

''என்னம்மே! சும்மா நிக்கிறே?''

அவள் கண்ணைத் திறந்து பார்த்தாள். அவள் அருகே ஒருவன் கையில் மணிப்பர்சுடன் அவளையே வெறித்து நோக்

கியவாறு நின்ருன். அவள் மடியிலே அந்தப் பரணி நட்சத்திரப் பாலகன் புடலம்பூவாய் வாடிக் கிடந்தான். பரணி நட்சத்திரத்தில் பிறந்தவன் தரணி ஆள்வாளுமே! ஆனல், இந்தப் பாலகன் தரணியை ஆள்வதற்கு முன்னுல், முதலில் அதில் தரித்து உயிர் பிழைத்திருக்க வேண்டுமே!

'என்னும்மே! வார்ரியா?'' என்று கேட்டான் அந்த ஆசாமி.

''ஐயா! குழந்தைக்கு அரை ஆழாக்குப் பால் வாங்கித் தாருங்களேன்'' என்று கம்மிய குரலில் கேட்டாள் மீனுட்சி.

''வாம்மா. பால்தானு? பாதம்கீரே வாங்கித் தாரேன்'' என்று கெக்கலிச் சிரிப்புடன் அபயம் கூறினுன் அந்த ஆபத் சகாயன்!

மீனுட்சிக்கு விஷயம் புரிந்துவிட்டது.

ஒருதரம் சிந்தித்தாள். இரண்டு தரம் சிந்தித்தாள். மீண்டும் மீண்டும் சிந்தித்தாள். தன் குழந்தை உயிரோடு இருக்க வேண்டுமாளுல், தான் உயிரோடு இருக்க வேண்டும்; தான் நன்ருகச் சாப்பிட்டால்தான் தன் குழந்தைக்கும் பால் கொடுக்க முடியும்; அதைக் காப்பாற்ற முடியும்......

''என்னும்மே! பிகுபண்றே!''

அவன் அவள் கையை எட்டிப் பிடித்தான்; அவள் கையை உதறிப் பிடுங்கவில்லை......

மீனுட்சி தன்னையும் தன் குழந்தையையும் காப்பாற்றிவிட்டாள்; காப்பாற்றிக் கொள்வதற்குக் குறுக்கு வழியைக் கண்டுபிடித்துவிட்டாள்! இனிமேல் தானும் வயிருர உண்ண முடியும்; தன் குழந்தைக்கும் வயிருரப் பாலூட்ட முடியும்......

மாதங்கள் இரண்டு கழிந்தன.

ஒருநாள் மீனுட்சி சோற்றை வாயருகே கொண்டு போனுள்; சோறு நாக்கில் படுமுன்னமே திடீரென்று

குமட்டலும் வாந்தியும் குமுறிக்கொண்டு வந்தது! அவள் வறட்டுத்தனமாக ஓங்கரித்தாள். அப்போதுதான் அவளுக்கு ஞாபகம் வந்தது. அந்த மாதக் கெடு கழிந்து பல நாட்களாகிவிட்டன......

மீனாட்சி திடுக்கிட்டாள்,

தினம் தினம் வாய் குமட்டியது. வாந்தி வந்தது. மார்பிலும் நாளுக்கு நாள் பால் வற்றத் தொடங்கிவிட்டது. கைக்குழந்தைக்குக் கிடைத்து வந்த பாலை அந்தக் கருக் குழந்தை அபகரித்துவிட்டது!

மீனாட்சி பயந்தாள்,

கையிலே ஒன்று!—...

வயிற்றிலே ஒன்று!......

ஐயா, பத்திரிகை ஆசிரியரே! தயை செய்து என்னை இத்தோடு விட்டுவிடுங்கள். நீங்கள் காதல் எழுதச் சொன்னது போதும். காதலாம் காதல்! நான் படைத்து விட்ட அந்தப் பேதை மீனாட்சியின் கதியைப் பற்றி என்னால் இதற்குமேல் கற்பனை செய்ய இயலாது. இந்தக் கதையை நீங்களோ அல்லது உங்கள் அருமை வாசகர் திருக்கூட்டமோ எப்படி வேண்டுமானாலும் முடித்துக் கொள்ளுங்கள். அவளது கதியைப் பற்றி நினைக்கவே எனக்குப் பயமாயிருக்கிறது!

தயை செய்து இந்த அரைகுறைக் கதையை ஏற்றுக் கொண்டு தங்கள் சன்மானத் தொகையை உடனே அனுப்பி வைத்து உதவுங்கள். இல்லையென்றால், இந்த வாரம் எங்கள் ரேஷன் அரிசியின் கதி என்னவாகும் என்று எனக்குத் தெரியாது.

அன்புள்ள

**ரகுநாதன்**

—1952



